

மணவாள மாமுனிகள் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

# முன்னுரை.

---

## அடியேன் செய்யும் விண்ணப்பம்.

இச்சிறுநூலுக்கு மாமுனிவனருள் விளக்கு என்று பெயரிடுகின்றேன். மணவாள மாமுனிகளின் மஹாக்ருபையை அடியேனொருவன் பெற்றிருப்பதை உலகுக்கு விளக்கிக்காட்டுவது இந்நூல். காகிதப்பஞ்சம் முதலான கஷ்டங்கள் மலிந்திருக்குமிக்காலத்தில் இந்நூல் எதற்காக? என்று அடியேனிடத்து அன்பும் பரிவுமுள்ள பெரியார்களும் சிலர் கருதக்கூடும். வாஸ்தவம். அவ்வக்காலங்களில் நடைபெறுகின்ற சில விசேஷங்கள் அப்போது எங்கும் பரவி எவர்க்கும் தெரியவரினும் சிறிதுகாலம் கடந்தவாறே பின்புள்ளார்க்கு உள்ளபடி தெரியாமல் மனம்போனபடி மாறுபாடாகவுரைக்க நேர்கின்றது. பழநடைவிளக்கம் முதலான சில நூல்களைப் பெரியோர்கள் ஏடுபடுத்தி வைத்திருந்ததனால் முற்காலத்துச் சில விசேஷங்களை இப்போதுள்ள நாமும் பின்புள்ளாரும் ஐயந்திரிபற அறிந்துகொள்ளலாகிறது. சில பல விஷயங்கள் இப்படி யெழுதிவைக்கப்படாமலே போவதனால் பின்புள்ளார் உள்ளபடி அறியப்பெறுமல் உண்மைக்குமாருகப் பரவ நேர்கின்றது.

திருவல்லிக்கேணியில் 50, 60 வருஷங்களுக்கு முன்னே 'உடையவர்கக்ஷி—மணவாளமாமுனிகள் கக்ஷி' என்று இருபிளவு ஏற்பட்டு விசித்திரமான செயல்களும் தோன்றினவாக ப்ரஸித்தமாயுள்ளது. இது நாள்பட்ட விஷயமாகையாலே இதை உள்ளபடி தெரிவிப்பார் இப்போதில்லை. இப்பிளவு ஏற்பட்டகாலத்தில் இரண்டு வகுப்பிலும் பல

பெரியார்கள் பிரமுகர்களாக இருந்தார்களாம். இப்பிளவு ஏற்பட்டது மிகவும் அசட்டுத்தனமானது என்று இப்போது பலர் பேசிக்கொண்டாலும், நல்லதோ கெட்டதோ எதுவும் பகவத் ஸங்கல்பத்தினால் ஒரு காரணார்த்தமாகவே உண்டாகின்றதென்று பெரியார் கருதுகின்றார்கள். நம்மாழ்வார் திருவிருத்தத்தில் "மதிவிகற்பால் பிணங்குஞ் சமயம் பலபலவாக்கி" என்றருளிச் செய்கிறார். இதனால், சிறு பிணக்கோடு பெரும் பிணக்கோடு வாசியற எப்பிணக்கும் எம்பெருமானது ஸங்கல்பத்தினாலேயே தோன்றுகின்றதென்பது தெளிவாக அறியக்கிடக்கின்றது. இங்ஙனம் பகவத் ஸங்கல்பத்தினாலேயே தோன்றின ஷை திருவல்லிக்கேணிப்பிணக்கை ஒருவரும் எழுதிவைக்காததனால், அப்பிணக்கு எக்காரணம் பற்றித் தோன்றியது? எவ்விதமாகத் தோன்றியது? அதன் பரிணாமங்கள் எப்படிப்பட்டவை? என்னும் விஷயங்களைப் பிற்காலத்தவர்கள் செவ்வனே தெரிந்துகொள்ள முடியாமலிருக்கின்றது. இப்படி மற்றும் பலபல விஷயங்களுமுண்டு.

இவையெல்லாம் அவசியம் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயங்களா என்ன? நாளடைவில் மறைந்து மறந்துபோக வேண்டிய விஷயங்களல்லவோவென்று சில பெரியார்கள் நினைக்கவுங்கூடும். பகவத்கதைகளை யெழுதிவைத்த மஹரிஷிகளும் பகவத்பாகவதவிரோதிகளின் பிறப்பு வளர்ப்பு முதலிய கதைகளையும் இதிஹாஸ புராணங்களாக எழுதிவைத்தேயுள்ளார்கள். உத்தர ஸ்ரீராமாயணத்தின் பெரும்பகுதி என்னவென்று பாருங்கள். பெருமாள் திருமொழியில் குலசேகராழ்வார் "அம்பொனெடு மணிமாடவயோத்தியெய்தி அரசெய்தி அகத்தியன்வாய்த் தான்முன் கொன்றான்தன் பெருந்தொல்கதை கேட்டு" என்றருளியுள்ளார். ராவணாதி

களின் பூருவவ்ருத்தாந்தங்களை யெல்லாம் அகஸ்த்ய மஹா முனிவர்வந்து வெகுபெரிய காரியமாக இராமபிரானுக்கு உபதேசித்தாராம். அதையும் விடாமல் வால்மீகிமாமுனிவர் ஒரு பெரியபுத்தகமாக எழுதிவைத்தார்.

இதையெல்லாம் பார்க்கும்போது, இக்காலத்துக் கதைகளும் சுருக்கமாகவாவது எடுபடுத்தப்படவேண்டுவது மிக அவசியமென்று தோன்றவேதான் அடியேன் ஆழ்வாராசார்ய ஸ்ரீ ஸூக்திகளுக்கெல்லாம் அரிய பெரிய வியாக்கியானங்களை இரவும் பகலுமெழுதிவரும் காரியங்களினிடையே இக்காரியத்தையும் சிறிதுசெய்து போருகின்றேன். இதுவும் ஒருவகையான லோகோபகாரமென்றே அடியேன் துணிபு. இதிலும் பல சாஸ்த்ரார்த்தங்கள் கிடைக்கும்.

மணவாளமாமுனிகள் அறிவிலியான அடியேனைக் கொண்டு தமக்கு ஸஹஸ்ர நாமஸ்துதியை இடுவித்துக் கொண்டதும், அதனால் அர்ச்சனையை நடத்திக்கொண்டதும், அதிலிருந்து ஒன்றிரண்டு மஹான்களுக்கு உத்வேகத்தைக் கிளப்பினதும், நாடுநகரமெங்குப்பார்த்தாலும் இதுவே ஓயாத வார்த்தையாயிருந்துவருவதும் விலக்ஷண பகவத்ஸங்கல்பமே. முதல்நாள் சாத்துமுறையன்று பேரருளாளன் மணவாளமாமுனிகள் ஸன்னிதிக்கெழுந்தருளி நடந்தேறின வைபவங்களை ஸேவித்தவர்கள் யாவரும் இது நித்ய விபூதியே யென்று சொல்லிக்கொண்டு மகிழ்ந்தார்கள். அன்னவர்கள் மறுநாள் இது லீலாவிபூதியே யென்னும்படியாயிற்று. உபயவிபூதிச் செல்வமும் எம்பெருமானுடையதேயன்றோ. ஆங்காங்குள்ள அன்பர்களும் நண்பர்களும் இதன் உபக்ரமோபஸம்ஹாரங்களை உள்ளபடி தெரிந்து கொள்ள விரும்பி அடியேனுக்கு எழுதியுள்ள கடிதங்களுக்கு அளவில்லை. அவர்களுக்கெல்லாம் தனித்

தனி விடையிறுக்க முடியாமல் இச்சிறுநூல் வாயிலாகப் பிற்காலத்தவர்கட்கும் விஷயதத்வம் விளங்குமாறு செய்து போருகின்றேன். ஏற்கெனவே வெளியிட்டுள்ள ஸாத்விக ரஸாயநப் பத்திரிகையினுல் சில விஷயங்கள் உலகுக்குத் தெரிந்தே யுள்ளன. அதுநிற்க.

வால்மீகிராமாயணத்திலில்லாத அருமையான சில விஷயங்கள் கம்பராமாயணத்திலுண்டு. யுத்தகாண்டத்தில் இராவணனுடைய மந்த்ராலோசனைச்சபை நிகழ்ச்சியைக் கம்பர் கூறுமிடத்துக் கும்பகரணனுடைய வார்த்தையாக ஒரு செய்யுள் அமைத்துள்ளார். அதாவது,

"சிட்டர்செயல் செய்திலை குலச்சிறுமை செய்தாய்
மட்டவிழ் மலர்க் குழலினளையினி மன்ன
விட்டிடுதுமேல் எளியமாதும் அவர்வெல்லப்
பட்டிடுதுமேல் அதுவுநன்று புகழாமால்" என்பதாம்.

முத்தண்ணா! இராவணா! நீ செய்தகாரியம் அழகன்று. உயர்ந்த குலத்தில் பிறந்த நீ சிஷ்டர்கள் செய்யவேண்டிய நற்காரியங்களைச் செய்யாது குலத்திற்கு இழுக்கான தீய காரியத்தைச் செய்தது அருவருக்கத் தக்கது. ஸீதையை நீ அபஹரித்துக் கொணர்ந்தது மிகவும் கெடுதலான செயல். அச்சீதை நமக்கு வேண்டாம்; அவளை இராமனிடத்திலேயே விட்டிடுவோம் என்று இவ்வளவும் நன்மையாகச் சொல்லிவிட்டு, உடனே சொல்லுகிறான் [ விட்டிடுதுமேல் எளியமாதும் ] அப்படி நாம் சீதையை விட்டு விடுவோமாயின் இதுநல்ல காரியமேயானாலும், நாம் இளைத்தவர்கள் என்கிற பரிபவச் சொல்லுக்கு ஆளாவோம். இச்சொல் நாம் சம்பாதிக்கத்தகாது. ஆகவே சீதையை நாம் விட்டுக்கொடுக்கவேண்டிய அவசியமில்லை. யுத்தமே ஒரு கைபார்த்துவிடுவோம்.

யுத்தத்தில் எதிரிகளால் நமக்குத் தோல்வியே நேரிடுமென்றும் நாம் மாண்டு போகவே நேருமென்றும் உண்மை தெரிந்தும் அதனால் பாதகமொன்றுமில்லை. மஹா புருஷர்களான அவர்களிடத்தில் நாம் பங்கமடைந்தோமாயின் இது நமக்குச் சிறந்த பெருமையேயன்றிப் பழியாகாது. நாம் இராமனோடு எதிர்த்துப் போர்புரிந்து மாண்டோமாயின் இராமனுடைய திவ்ய சரிதை இவ்வுலகில் விளங்குமளவும் நம்முடைய பெயரும் கூடவே விளங்கிவருமன்றோ? இந்தப் புகழ் நமக்கு ப்ராப்ய மன்றோ? இது எளிதில் கிடைக்கக் கூடியதா? ஆகவே எதிர்த்துப்போர்புரிவோம் என்று முடித்தான் கும்பகரணன்.

உண்மையாகவே *கூஜந்தம் ராம ராமேதி* என்று தொடங்கி ஸ்ரீராமாயண பாராயணம் செய்யும் போதுகளில் இராமபிரானுடைய ஞாபகம் வருதற்கு முன்னமே ராவண கும்பகர்ணாதிகளின் ஞாபகம் வந்து ஸ்ரீராம லக்ஷ்மணாதிகளின் திருநாமங்களோடொப்ப அவ்வரக்கர்களின் நாமங்களும் அடிபட்டுவருவதை இன்றளவும் காணுகின்றோம். இப்படியே இனிமேலும் காருள்ளளவும் கடல் நீருள்ளளவும் வேத முள்ளளவும் வேதகீதனுள்ளளவும் நடந்துவருமென்பதில் ஸந்தேஹமில்லையே. இப்படிப்பட்ட புகழையன்றோ கும்பகரணன் விரும்பினான். திருப்பாவையிலும் ஒரு பாசுரத்தில் அவனுக்கு இடம் கிடைத்துவிட்டதன்றோ. அவனெண்ணின எண்ணம் பழுதுபடாமே நிறைவேறிவிட்டதன்றோ. அஃதேபோல, நம்பெயர் விளங்க வேணுமென்னும் நசையோடே நல்லகாரியம் செய்வாருடைய பெயர்களோடுகூடவே அக்காரியங்களுக்கு இடையூறு செய்தல், அவற்றைப் பழித்தல் முதலியன செய்வாருடைய பெயர்களும் நீடூழி விளங்க வேண்டியவையாதலால் அதற்குறுப்பான காரியங்கள் மிக அவசியமே.

இங்ஙனம்:

ஸ்ரீவைஷ்ணவதாஸன்

**அண்ணங்கரார்ய தாஸன்.**

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

    

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கரா சார்ய தாஸன் எழுதிய

# மாமுனிவனருள்விளக்கு.



*தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழி பட்டும் பூசித்தும் போக்கினேன் போது* என்று திருமழிசைப் பிரான் திருவாய் மலர்ந்தருளினபடி போது போக்கி வருமவனடியேன். இருபத்திநான்கு மணி காலத்தில் ஊணுறக்க மென்னும்படியான லௌகிக வியாபாரங்களுக்காக நாலைந்து மணி காலமே செலவிடுவேன். மற்றைக் காலமெல்லாம் அடியேனுக்கு ஷை திருமழிசைப் பிரான் பாசுரக் கணக்கிலேதான் சென்றுவருகிறது என்கிற இந்த மஹானந்தத்தை அடியேன் அடிக்கடி உபந்யாஸ கோஷ்டிகளில் சொல்லிக் கொள்வதுமுண்டு. அதையே இங்கும் எடுபடுத்தி வைக்கிறேன்.

*உண்டியே உடையே உகந்தோடு மிம் மண்டலத் தொடுங் கூடுவதில்லை யான்* என்கிற பாசுரத்தை அநுஸந்திக்கும்போது உண்மையாகஅடியேன் ஸ்ரீ குலசேகராழ்வார்க்கு இருந்த இந்த அத்யவஸாயத்தை எம்பெருமான் மிக நீசனான அடியேனுக்கும் தந்தருளினனே! இஃது என்ன பரமகிருபை! என்று உள்ளம் பூரிப்பதுண்டு. அடியேன் பிறந்தது முதலாக இன்றளவும் தேஹ யாத்திரைக்காக அணுவளவும் கரையாமல் ஆத்மயாத்திரையிலேயே

யிருந்து வருகிறேனென்பது ஆத்மஸ்துதி [தற்புகழ்ச்சி] யானாலும் இதை வெளியிட்டுக்கொள்வதில் அடியேன் கூச வேண்டிய அவசியமில்லை. தாராளமாக வெளியிடுகிறேன்.

* நீசனேன் நிறை யொன்றுமிலேன் * சீலமில்லாச் சிறிய னேலும் செய்வினையோ பெரிதால்* என்பவை முதலான பல பாசுரங்களினால் தம்முடைய நைச்சியத்தை எல்லைகடந்து பேசிக்கொண்ட நம்மாழ்வாருங்கூட, ஸமயவிசேஷங்களில் தம்முடைய ஆனந்தத்தை அபரிமிதமான செருக்குடனே அருளிச்செய்து கொண்டிருக்கவும் காணா நின்றோம். * எனக்கினியார் நிகர் நீணிலத்தே * மாறுளதோவிம்மண்ணின் மிசையே* எனக்கார் பிறர் நாயகரே * என்றிப்படி யெல்லாமன்றோ செருக்கிக் களித்துப் பேசியுள்ளார். இப்படி ஒவ்வொரு ஆழ்வார்களின் திருவாக்கிலும் பெரும்பாலும் பாசுரங்கள் அவதரித்துள்ளன.

* அமர்யாத: க்ஷுத்ர: சலமதி:.....ந்ருசம்ஸ: பாபிஷ்ட: * என்று அபரிமிதமான நைச்சியத்தை யநுஸந்தித்த ஆளவந்தார் திருவாக்கிலேயே * மீமாம்ஸா சாஸ்த்ர யுக்மச்ரம விமல மநா ம்ருக்யதாம் மாத்ருசோங்ய: * என்கிற செருக்குமொழியும் வெளிவந்திருக்கிறது.

* மத்த: ப்ரத்யவர: கச்சித் நாஸ்தி ஸுக்ரீவஸந்நிதௌ * என்று நைச்சியம் கூறின திருவடியின் வாக்கில் நின்றுமே * பந்நகாசநமாகாசே பதந்தம் பக்ஷிஸேவிதே, வைநதேயமஹம் சக்த: பரிகந்தும் ஸஹஸ்ரச: * என்று தோள்தட்டிச் சொன்ன வார்த்தையும் வெளிவந்துளது.

இவையெல்லாம் ஒருபுறமிருக்கட்டும். நம் மணவாள மாமுனிகள் அளவுகடந்த நைச்சியத்தை யநுஸந்திப்பதற்கென்றே அவதரித்தவர். தமக்கொரு பெருமையிருப்பதாகக்

கனவிலும் நினைக்கமாட்டாத அவர்தாமும் சிலஸமயங்களில் ஆனந்தம் பொங்கித் தம்மையும் மறந்து, பகவத்கிருபை யாலும் ஆசார்யகிருபையாலும் தமக்குண்டான அதிசயங் களை வெளியிட்டுக் கொள்ளாவிடில் செய்ந்நன்றி கொன்ற பாவமாகுமென்று துணிந்து தம்முடைய போது போக் கைத் தெரிவித்தருளும் முகத்தால் தமது பெருமையைத் தாமே அருளிச் செய்துள்ளார்.

ஆர்த்திப் பிரபந்தத்தில் "பண்டு பலவாரியரும் பாரு லகோருய்யப் பரிவுடனே செய்தருளும் பல்கலைகள் தம் மைக் கண்டதெல்லா மெழுதியவை கற்றிருந்தும் பிறர்க் குக் காதலுடன் கற்பித்துங் காலத்தைக் கழித்தேன்" என் பது முதலான பாசுரங்கள் காண்க.

நன்னூல் என்கிற ஒரு பெரிய சாஸ்த்ரத்தில்,

"தன்னுடை யாற்றலுணராரிடையினும்
தன்னை மறுதலை பழித்த காலையும்
தன்னைப் புகழ்தலும் தகும் புலவோர்க்கே"

என்று கூறியுள்ளது அறிஞர்கட்குத் தெரியும். அந்த வகையில் அடியேன் எவ்வளவும் தற்புகழ்ச்சி செய்து கொள்ள உரிமையுண்டு, அவசியமுண்டு. உண்மையில் இப் புகழ்ச்சியெல்லாம் என்னைச் சேராது, மணவாள மாமுனி களுக்கே சேரும். அவருடைய திருவருளையே அடியேன் அளவுகடந்து பெற்றவன். ஸத்வகுண மொன்றே வடிவெ டுத்த அவருடைய விபவத் திருமேனியை ஸாக்ஷாத்கரிக்கும் பாக்கியமும் பெற்றவனடியேன். இந்த மஹானந்தத்தை ஏற்கனவே அடியேன் சில நூல்களில் வெளியிட்டுமிருக் கிறேன். இதன் அநுயந்தமான நூல்களிலும் காணலாம்.

ஸமீபகாலத்தில் ஒருபெரியவர் அடியேனுடையதோஷங்களைச் சரமாரியாக எடுத்துப் பொழிந்தபோது "சந்தி சாவித்ரி பண்ணாதவன்" என்று சொல்மாரி பொழிந்தார். உண்மையான விஷயத்தை அவர் கண்டறிந்து வெளியிட்டது பற்றி அடியேனுக்குண்டான ஆனந்தம் அளவிட முடியாதது. உண்மையில் அடியேன் சந்தி சாவித்ரிகளை விட்டுத் தொலைத்து வெகுநாளாயிற்று. முச்சந்தியும் மணவாள மாமுனிகளின் திருநாமங்களை ஜபம் செய்வதையே அடியேன் நித்ய நைமித்திக கர்மாநுஷ்டானமாகக் கொண்டவன். ஸ்ரீவசந பூஷணத்திலும் "ஜப்தவ்யம்........" இத்யாதி சூர்ணையால் காட்டினது இதுவே. "குறிகொள் அந்தணமை தன்னையொளித்திட்டேன் என்கணில்லை" என்று தொண்டரடிப் பொடி யாழ்வார் நைச்சியம் பாவித்து அருளிச் செய்ததை அடியேன் உள்ளபடி அனுட்டானத்தில் கொண்டவன். ஸ்ரீவரவரமுநிசதகத்திலே எறும்பியப்பா ஆச்சரியமாக ஒரு ச்லோகரத்னம் அருளிச் செய்துள்ளார். அதாவது:—

> "பக்ஷ்யர்பக்ஷ்யே பயவிரஹிதஸ் ஸர்வதோ பக்ஷயித்வா
> ஸேவ்யாஸேவ்யேஷ ஸமயரஹிதஸ் ஸேவயா தோஷயித்வா,
> க்ருத்யாக்ருத்யே கிமபி நவிதந் கர்ஹிதம் வாபி க்ருத்வா
> கர்த்தும் யுக்தம் வரவரமுநே காங்க்ஷிதம் த்வத்ப்ரியாணாம்."

என்கிறவிது ஐம்பத்தாறுவது சுலோகம். இதன் பொருளை அடியேன் விவரிக்க வேண்டியதில்லை. இதை இதர ஸம்பிரதாயஸ்தர்கள் இகழ்வார்களெனினும் ஸ்ரீவரவர முனி பக்தர்கள் உச்சிமேல் வைத்து மெச்சுகின்றார்கள். அந்த ச்லோக ரத்னத்தில் உள்ள திடமான நம்பிக்கையினால் அதில் குறித்த காரியத்திற்காக அடியேன் கொண்டிருக்கிற நிஷித்தாநுஷ்டானங்களெல்லாம் மணவாள மாமுனிகளின்

திருவுள்ளத்திற்கு மிகவுகப்பாயிருக்குமாதலால் அடியேனைப்பற்றின தோஷ கீர்த்தனங்கள் அத்தனையும் மாமுனிகளுக்கு முகோல்லாஸ ஹேதுவேயாய் அந்த வழியில் அடியேனுக்கும் பரமானந்த ஸந்தோஹ பீஜமென்பதில் ஸந்தேஹமில்லை.

மணவாள மாமுனிகளின் பெருமையை இடையறாது சிந்திப்பதென்கிற ஒரு பெருந் தவத்தினால், அடியேன் அபரிமிதமான ஸித்திகளை யடைந்தவன். அவற்றில் ஒன்றை மாத்திரமே இங்கு விஜ்ஞாபிக்கிறேன். ஆனால் இது உலகமுணராததன்று. எவ்வுலகு முணர்ந்ததேயாதலால் நினைப்பூட்டுகிறேனத்தனை. ஸ்ரீவைஷ்ணவர்களுக்கெல்லாம் அவசியம் நித்யாநுபவத்திற்கு வேண்டிய நூல்கள் எவ்வளவு உள்ளனவோ அவ்வளவுக்கும் அடியேனுடைய வியாக்கியானங்களைக் கொண்டே உலகம் களிக்கும்படி மாமுனிகள் அருள் செய்துள்ளார். ஆழ்வார்களின் அருளிச்செயல்களோ, ஸகல ஆசாரியர்களும் தென்மொழியிலும் வடமொழியிலும் அருளிச்செய்த ஸ்ரீஸூக்திகளோ இவையெல்லாவற்றுக்கும் அடியேன்வாயிலாக வியாக்கியானங்களை வெளியிடுவிக்க விரும்பிய மணவாள மாமுனிகள் பரமகிருபையுடனே சிந்தை தன்னுள் நீங்காது அமர்ந்திருந்து; இதுவரையில் வெளியிடுவித்திருக்கின்ற வியாக்கியானங்கள் உலகமெங்கும் பரவியுள்ளன. தமிழ் நாட்டினர்க்கு உதவும்படி தமிழிலும், தெலுங்கு தேசத்தார்க்குத் தெலுங்கிலும், ஹிந்தீ தேசத்தவர்களுக்கு ஹிந்தியிலும் ஸம்ஸ்க்ருத வித்வான்களுக்காக ஸம்ஸ்க்ருதத்திலும் ஆக நான்கு பாஷைகளிலும் நாடோறும் க்ஷணந்தோறும் நாடு நகரமும் நன்கறிய அடியேன் தொண்டு பூண்டமுதமுண்டும் உண்பித்தும் களிப்பது மாமுனிகள் திருவருளே.

இரண்டு வருஷங்களுக்கு முன்பு மதுரையிலிருந்து பரமாப்தரான ஒரு அட்வகேட்ஸ்வாமி பரமப்ரீதியோடு அடியேனுக்கு ஒரு ஸ்ரீமுகம் ஸாதித்தார். அவர் அடியேனை மிக வயது சென்றவனுகக்கருதி ஷஷ்டிபூர்த்தி ஸமீபித்திருக்குமென் றெண்ணி, அந்த ஸமயத்தை முன்னமே தெரிவிக்கும்படி திருமுகமருளினர். அப்போது அந்த மஹானுக்கு அடியேன் விடுத்த பதில் விண்ணப்பம்—

"ஸ்வாமிந்! அடியேனுக்கு ஷஷ்டி பூர்த்திக்கு இன்னமும் ஏழெட்டு வருஷங்களுக்கு மேலுள்ளது. இதுவரையில் அடியேன் எழுதி வெளியிட்டிருக்கின்ற லோகோபகார க்ரந்தங்கள் 200. இவை கிடக்க. இப்போது ஒரு ஸங்கல்பம் செய்துகொண்டு தேவரீருக்கு இந்த விண்ணப்பமெழுதுகின்றேன். இன்றுமுதலாக தமிழ், ஸம்ஸ்க்ருதம், தெலுங்கு, ஹிந்தி ஆகிய இந்நான்கு பாஷைகளிலும் உலகுக்கு மஹோபகாரகமான நூல்களை யெழுதத் தொடங்கிஷி ஒவ்வொரு பாஷையிலும் அறுபது அறுபது க்ரந்தங்களை அடியேனெழுதி வெளியிட்டான பிறகே அடியேனுக்கு ஷஷ்டி பூர்த்தி அணித்தாகுமென்று கொள்ளக்கடவீர்" என்று.

அந்த விண்ணப்பத்தின்படியே அல்லும்பகலும் மணவாள மாமுனிகளைச் சிந்தை செய்துகொண்டே அரும்பெருங்காரியங்கள் நடத்தி வருகின்றேன். நான்கு திசைகளுக்கும் தவறாது உணவை அளித்து வருகின்றேன். காகிதப் பஞ்சம் மலிந்த இக்காலத்திலும் இக்காரியங்கள் சிறிதும் முட்டுப்படாதபடி நன்கு நிறைவேற்றிக் கொண்டு போவது எம்பெருமானன்று; நம் மணவாள முனிகளே யென்று சபதமிட்டுரைப்பேன். ஸிம்ஹ கர்ஜனையாக முழங்குவேன் இதை. இந்தச் செருக்குமொழிகளை அடி

யேன் இங்ஙனே வெளியிடாவிடில் மாமுனிகள் திறத்திலே மிகவும் க்ருதக்னனாவேன். *இமவந்தம் தொடங்கி இருங் கடலளவும்* என்று பெரியாழ்வார் அருளியபடி ஆஸேது ஹிமாசலமுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களனைவர்க்கும் ஒரு நாள் தவறாமல் அடியேன் அளித்துவரும் உணவு நம் மாமுனி களின் அருள்வளமே. எனது உயிர் அப்பேராசிரியருடைய திருவடிவாரத்திற் சென்று சேரும் க்ஷணம்வரையில் இத் தகைய தொண்டுகளை ஆற்றும்படி அருள் பெற்றுள்ளேன். *உலகோ வுறங்குமே* என்று நம்மாழ்வார் கரைந்தபடி ஊணுமுறக்கமும் தவிர மற்றொன்று கனவிலுமறியாதார்க்கு அடியேனெழுதுகின்றவிவ்வளவும் ஊமையரோடு செவிடர் வார்த்தையாகுமித்தனை. அதனாலென்ன?

*நஹி வந்த்யா விஜாநாதி குர்வீம் ப்ரஸவ வேதநாம்* என்று பண்டே சொல்லிவைத்ததுண்டே. ப்ராஹ்மண வுலகுக்கும் ஸ்ரீவைஷ்ணவ வுலகுக்கும் வைதிக வுலகுக்கும் அடியேன் ஒவ்வொரு க்ஷணத்திலும் க்ரந்தங்கள் மூலமாக வும் மாதாந்தப் பத்திரிகைகள் மூலமாகவும் செய்துவருகிற தொண்டுகளை ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீவானமாமலை ஸ்வாமிகள் ஸ்ரீபரகால ஸ்வாமிகள் ஸ்ரீஅஹோபிலம் ஸ்வா மிகள் ஸ்ரீசங்கராசார்யஸ்வாமிகள் முதலான ஸகலமடாதி பதிகளும் பரிகணிதர்களான த்ரிமதஸ்த வித்வான்களும் அபிநந்தனம் செய்து வெளியிட்டிருக்கின்ற ஸ்ரீமுகங்கள் உலகம் பரவியுள்ளன. உலகத்திலுள்ள ஸகலமடாதிபதிக ளுங்கூட ஒன்றுசேர்ந்து செய்யமுடியாத க்ரந்த ப்ரசாரங் களை அடியேன் செய்துகொண்டிருப்பதாக ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமிகள் ஸபைகள்தோறும் பேசிவருகிறார்.

இப்போது ஆஸ்தானத்தை அலங்கரித்தருளாநின்ற ஸ்ரீவானமாமலை ஸ்வாமியை இரண்டு வருஷங்களுக்குமுன்பு

அடியேன் ஸேவிக்க விடைகொண்டபோது அந்த ஸ்வாமி பரமக்ருபை பொலிய அருளிச்செய்தவார்த்தை "அண்ணு! இந்த ஆச்ரமத்தில் எனக்கு ஒரு குறையுமில்லை. உமது உபந்யாஸங்களை ஆங்காங்கு அடிக்கடி கேட்டுக் களிக்கும் பாக்கியமிருந்தது முன்பு; அதற்கு விரோதமாக இந்த ஆச்ரமம் நேர்ந்திருக்கின்றதே! என்கிற இந்த ஒரு குறையைத்தான் நான் ஆப்தர்களிடம் சொல்லுவது." என்று.

இங்ஙனே மஹான்களின் விலையில்லாவார்த்தைகள் ஒன்றிரண்டல்ல; பல்லாயிரமுண்டு.

இனி ப்ரக்ருத விஷயத்தில் செல்லுவோம். 9-11-44ல் ஒரு கடிதம் கிடைத்தது. அதாவது—

---

**T. E. Varadachari,**
Forest Range officer (Retired)

North mada street,
L. CONJEEVERAM
8—11—1944.

ஸ்ரீமதே ராமாநுஜாயநம:

ஸ்ரீ. உ. வே. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி ஸன்னதியில் அடியேன் தெண்டன் ஸமர்ப்பித்துச் செய்யும் விண்ணப்பம்.

.........அடியேன் தேவளிடத்தில் அபசாரப் பட்டதற்கு மனம் மிகவும் தாபமடைந்திருக்கிறது. அது சாந்திபெறவும், ப்ராரப்த மடியாக வந்த அஹங்காரம் கழியவும் தேவள் க்ஷமை யல்லது வேறு ப்ராயச்சித்தமில்லை என்று அறிந்து, தேவள் க்ஷமிக்கும் என்கிற துணிவுடன் இதை எழுதத் துணிந்தேன். க்ஷமிக்கவும்.

தி. ஈ. வரதன்.

ஆரியர்காள்! இந்த மன்னிப்புக்கடிதத்தை அடியேன் பெருமைக்காக வெளியிட்டுக் கொள்ளவில்லை. இதனுல் அடியேனுக்கு யாதொரு பெருமையுமில்லை. உலகில் யாவருமறிந்த ஒரு வசனமுண்டு;—*விவாதச் ச விவாஹச் ச ஸமயோரேவ சோபதே* என்பர். விவாதமோ விவாஹமோ ஏறக்குறையஸமமானவர்களுக்கு நேருவதுதான் அழகு என்றபடி. அவருடைய வ்ருத்திகளுக்கும் அடியேனுடைய வ்ருத்திகளுக்கும் என்ன பொருத்தமுள்ளது? ஏதோ ப்ராரப்தகருமம் காரணமாக வந்த அஹங்காரத்தினுல் அபசாரப் பட்டதாகவும் அதை க்ஷமிக்க வேண்டியதாகவும் அவர் ஸத்வம் தலையெடுத்துத் தெரிவிக்கிருர். அபசாரப்பட்டதனுல் அடியேனுக்கு நேர்ந்த சிறுமையுமில்லை, இப்போது அவர்தாமே மன்னிப்பு வேண்டுவதனுல் அடியேனுக்கு விளைவதொரு பெருமையுமில்லை. இரண்டையும் அஸத்கல்பமாக நினைத்திருப்பவனடியேன்.

வடமொழியிலும் தென்மொழியிலும் அடியேனெழுதி வெளியிட்ட நூல்களில் சிலவற்றில் மதபேதம் காரணமாகச் சில பெரிய வித்வான்கள் மறுப்புகள் எழுதி வெளியிட்டதுண்டு. அவர்களே பிறகு அநுதாபங்கொண்டு மன்னிப்புக் கடிதங்களெழுதினதுமுண்டு. திருவஹீந்திரபுரம் சேட்லூர் நரஸிம்ஹாசாரியர், திருக்குடந்தை ராயம்பேட்டை (R. V.) கிருஷ்ணமாசாரியர் என்னுமிருவர்கள் மஹாமஹோபாத்யாய பட்டம் பெற்றவர்கள். பெரிய வித்வான்களாக மதிக்கப்பட்டவர்கள். அவர்கள் பலபல வருஷங்கள் விஷயசார்ச்சைகளில் போராடி நிந்தைகளையும் நிரவதிகமாகப் பொழிந்து, முடிவில் மன்னிப்புக் கடிதங்கள் எழுதிக்கொண்டதெல்லாம் ஒன்றுவிடாமல் அச்சாகி வெளிவந்திருப்பவை. அவ்விருவரும் இப்போது இவ்விபூதியில் இல்லையாயினும்,

அவர்களைப்போலவே [அவர்களுக்கும் மேலாக] பரிகணித வித்வன் மணியாகி நாளைக்கும் விளங்குகின்ற திருச்சி. எ. வி. கோபாலாசாரியர் M.A. B.L., ஸ்வாமிகள் அடியேனோடு இரண்டு வருஷங்கள் ஓயாதே விஷயசர்ச்சைகளைச் செய்து வேறாகப் பலவுமெழுதி பிறகு மிக்க அநுதாபங்கொண்டு மன்னிப்புக்கடிதமெழுதிக்கொள்ள அதுவும் பிரசுரமாகி வெளிவந்து விளங்காநின்றது.

14—8—35ல் அந்த பிரபல அட்வகேட்ஸ்வாமி எழுதியனுப்பிய ஸ்ரீமுகத்தில்— "அடியேன் இனிமேல் புதிதாக எந்தக்ரந்தமெழுதினாலும் அது அநுகுணமாகவேயிருக்கும். இதற்கு முன் எழுதப்பட்டு முடிந்து அச்சுக்குக் கொடுக்கப்பட்ட க்ரந்தங்களிலிருப்பதைமட்டும் க்ஷமித்துக்கொள்ளவேணும்" என்கிற வாசகங்களை யெழுதினது மாத்திரமன்றிக்கே ஸ்ரீரங்கத்தில் வைகுண்ட ஏகாதசியன்று ஆயிரங்கால் மண்டபத்தில் பல்லாயிரவர்முன்பே அடியேனைத் தழுவி இதைப் பலர்க்கும் வெளியிட்டார். அடுத்தபடி ஸ்ரீவில்லிபுத்தூரில் நடந்த பெரிய ஸதஸ்ஸிலும் அவர் எழுந்தருளி மஹா கோஷ்டியில் இதை வாய்விட்டு விளம்பினார். நாளைக்கும் அவரை நேரில் கேட்கலாம்.

அவ்வளவு தூரமும் போகவேண்டா. இவ்விடத்திலேயே நம்முடைய சமீபத்திலேயே ஸேவை ஸாதிக்கின்ற அபரதேசிகனான ஸ்ரீமத் கோழியாலம்ஸ்வாமி தாமும் தம்முடைய சிஷ்யவர்க்கங்களுமாக மூன்று நான்கு வருஷ காலம் அடியேனோடு ஓயாமல் க்ரந்தச் சண்டைகளிட்டார். முதலில் தம்முடைய திருநாமத்தினாலேயே மறுப்பு நூல்கள் அச்சிட்டு வெளியிட்டார். பிறகு என்ன காரணத்தினாலோ தாம் மறைந்து நின்றருளி தம்முடைய சிஷ்யர்களிலும் ஆப்தர்களிலும் ஒவ்வொருவர் பெயரால் ஒவ்வொரு

மறுப்பு நூல் வெளியிடுவித்தார். எல்லாவற்றுக்கும் அடியேனொருவனே ஸமாதான க்ரந்தங்களைத் தாழாதே வெளியிட அவற்றைப்பெற்று முடிவில் க்ஷமைகொண்டு இப்போது பரமசாந்தியோடே ஸேவை ஸாதித்தருளாநின்றார். இதைச் சிறிது விவரிக்கவேண்டிய அவசியமுளது;

இந்த ஸ்வாமி சில வருஷங்களுக்கு முன்பு நம்பெருமாள் ஸன்னிதியில் கீழண்டைத் திருக்காவேரியருகில் அடியேனோடு ஸந்தித்து நெடும்போது வார்த்தையாடுகையில், அப்போது ப்ரஸக்தமான விவாத விஷயத்தில் மிகவும் திருக்கண்கள் சிவந்து "இந்த விஷயத்தில் க்ரந்தமூலமாக வாதிப்போம்; நான் வெற்றி பெறுவிடில் இந்த த்ரிதண்டயஜ்ஞஸூத்ரங்களை யறுத்தெறிந்து போடக்கடவேன்" என்று ப்ரதிஜ்ஞை செய்தருளினர். இது இன்னமும் அந்த ஸ்வாமிக்கு மறந்திராது. அப்படியே அன்றே தொடங்கி அடியேன்மீது க்ரந்தமெழுதி அச்சிட்டார். அந்த சர்ச்சைகள் சில வருஷகாலம் பிரளயமாகப் பல க்ரந்தங்களால் நடந்தன. அந்த விவாதங்களின் முடிவு என்னாயிற்றென்று அறிஞர்கள் அறிந்தேயுள்ளார்கள். முன் தடவையில் இந்த ஸ்ரீமத் ஸ்ரீகோழியாலம் ஸ்வாமி இவ்வூரைவிட்டு வெளியே யெழுந்தருளும்போது ஸம்ஸ்க்ருதத்தில் ச்லோகங்களாகவே ஸ்ரீமுகமெழுதி பரிசாரகர் மூலமாக அடியேனுக்கு அனுப்பியருளினர். அவரோ உத்தமாச்ரமி. எல்லாவிதத்திலும் மிகப் பெரியார். அவர்தாமும் மன்னிப்புக் கேட்டுக்கொண்டாரென்று அடியேன் வெளியிட்டால் இது அடியேனுக்கு ச்ரேயஸ்கரமன்றென்று அந்த ஸ்ரீமுகத்தை அடியேன் ஸுரக்ஷிதமாக ஆத்மாநுபவத்திலேயே இற்றைக்கும் எற்றைக்கும் வைத்துக்கொள்ளமாத்திரமே ப்ராப்தம்.

இந்தச் சிறு நூலில் இந்த யதிகளின் விஷயமாக இவ்வளவு உண்மைகளை எழுதவேண்டிய அவசியமுளதோவென்று சிலர் ஆலோசிக்கவுங் கூடும். கேண்மின். இந்நூலுக்கு மாமுனிவனருள்விளக்கு என்றன்றோ பெயர். மாமுனிகளின் திருவருளை அடியேனொருவனே அஸாதாரணமாகப்பெற்றிருப்பதாகிற பெருமையை வெளியிடுவதற்காகவேயன்றோ இந்நூல் தோன்றுகின்றது. இந்தயதிகள் மணவாளமாமுனிகளின் திருவுள்ளம் புண்படும்படியாகவே யெழுதியிருந்தவற்றை அவலீலையாக அடியேனொருவன் நிரஸித்துத் தீர்த்தது மாமுனிகளின் திருவருளினாலே யாதலால் இந்நாலுக்கு இது சிகரமான விஷயமென்றும் கொள்ளலாம்.

"மணவாளமாமுனிகளின் ஆசாரியர்கள் அஸங்கதமாக எழுதிவைத்திருந்தவைகளை அக்காலத்தில் தோன்றின ஒரு பெரியவர் கண்டித்துவிட்டாரென்றும், அதன்மேல் அன்று முதல் இன்றளவாக ஒருவராலும் பதில்சொல்ல முடியாமலிருக்கிறதென்றும், சதுர்முக ப்ருஹஸ்பதிகளே நேரில் வந்தாலும் சொல்ல முடியாதென்றும்" இப்படியெல்லாம் எழுதுவித்திருந்தார் இந்த யதிகள். அவ்வளவும் இவருடைய ப்ரமமேயென்று பரக்க நிரூபித்தானபின்பு அடியேனுக்கு ஸ்ரீமுகப்ரஸாதமனுப்பிவிட்டு சாந்தரானார். மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளில் லவலேசமும் ஸேவியாதவரும் ஸேவிக்கபாக்யமற்றவருமான இந்தயதிகள் இன்னமும் மாமுனிகள் பக்கலிலே காட்டுகின்ற ப்ரத்வேஷம் ஆச்ரமத்திற்கு அடியோடு தகாதது என்று விஜ்ஞாபிக்கிறேன். இப்போது இங்கு ப்ராஸங்கிகமானவிது இவ்வளவு போதும்.

இங்ஙனே பல மஹநீயர்களின் க்ஷாமணா பத்ரிகைகளைப் பெற்றிருக்குமடியேனுக்கு இப்போது கிடைத்தவிந்த சிறுகடிதத்தினால் ஒரு பெருமையுமில்லை யென்பதை

யும், பெருமைக்காக இது வெளியிட்டுக் கொண்டதன்று என்பதையும் மஹான்கள் உணர்வார்கள். பின்னை யெதற்காக வெளியிட்டதென்னில்; அவர் எழுதின அக்கடிதத்தில் உள்ள வாசகங்களைக் கவனியுங்கள். "ஏதோ ப்ரக்ருதி வசாத் நேர்ந்துவிட்டது; க்ஷமிக்கவும்" என்றிவ்வளவே அவர் தமது ஸௌஜந்யத்திற்காக ஒருவரி எழுதியிருந்தால் போதுமானது. இவ்வளவன்றி அவர் எழுதியிருக்கிற நடையை நோக்குங்கால் அது அவராக எழுதினதன்று; மாமுனிகள் ஆவேசித்து எழுதுவித்தது என்றறிந்து கொள்வதில் அருமையுண்டோ? அந்த வாசகங்களை ஊன்றிப் பாருங்கள். ப்ராரப்த கருமமடியான அஹங்காரத்தினால் அபசாரப்பட நேர்ந்ததென்கிறார். அதுவொரு பெரிய விஷயமன்று. *மண்ணாய் நீரெரிகால் மஞ்சுலாவுமாகாசமுமாம் புண்ணாராக்கை யென்கிற பாஞ்ச பௌதிக சரீரம் உள்ளவரையில் ப்ராரப்த கருமம் தொலையப்போகிறதில்லை, அஹங்காரமும் தவிரப் போகிறதில்லை:

இது இந்நிலத்தில் பிறந்தாரனைவர்க்கும் பெரும்பாலும் ஸமானம். *விண்ணுளார் பெருமாற்கடிமை செய்வாரையுஞ் செறும் ஐம்புலனிவை மண்ணுளென்னைப்பெற்றால் என்செய்யா * என்று கலியின் தொடக்கத்திலேயே நம்மாழ்வார் அருளிச் செய்தாரென்றால் நம்போல்வாரைப் பற்றி இப்போது சொல்லவேண்டுமோ ? வேண்டா;

"நான்பட்ட அபசாரத்திற்கு தேவரீருடைய
க்ஷமை தவிர வேறு ப்ராயச்சித்தமில்லை
யென்று அறிந்து"

என்று எழுதியிருக்கிறாரே, இதில் (அறிந்து) என்கிற வினையெச்சந்தான் விவேகிகளால் ஆழ்ந்து நோக்கத்தக்கது.

அடியேனும் அதை நோக்காமலே அக்கடிதத்தை உபேக்ஷித்திருந்தேன். அருட்கடலான மணவாளமாமுனிகள் அறிவிக்க அதனால் அறிந்து அவர் எழுதினதன்றோ அது— என்று அடியேனும் அறிவிக்கப் பெற்றேன். அத்திருவருளை வெளியிட வேண்டியே அக்கடிதத்தை வெளியிட இன்றே மாமுனிகள் மதிதந்தருளினர். இதுநிற்க.

அக்கடிதம் கிடைத்தவுடனே அவர்க்கு மிகவிரிவான பதில் கடிதம் எழுதியனுப்பினேன். ஒரு பெரிய மனிதர் அடியேனுக்கனுப்பியிருந்த (டைப் செய்த) இங்கிலீஷ் கடிதத்தின் காபியும் அத்துடன் அவர்க்கு அனுப்பநேர்ந்தது. அதையும் அதன் மொழிபெயர்ப்பையும் ஈண்டு வெளியிட்டு, பிறகு அடியேனது பதில் கடிதத்தின் ஸாரத்தையும் வெளியிடுகிறேன். [ திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸன்னிதியில் வருஷந்தோறும் 500 ரூ. கைங்கரியம் (உபயம்) நடைபெறுமாறு மூலதனம். சேமித்திருக்கிற வொரு மஹானுடைய புதல்வர் திருவாளர் M. வெங்கடகிருஷ்ணன் என்பவர் எழுதியது இந்த ஆங்கிலக் கடிதம். இதை ஒரு இங்கிலீஷ் ஜர்னலில் வெளியிட அனுப்பியிருந்ததாகவும் தெரிவித்துள்ளார். ] அக்கடிதம் வருமாறு —

# WHITHER CONJEEVERAM.

---

On 29—10—44, I had been to Conjeeveram to worship Varadaraja. That happened to be Ekadasi day. I came to know that at about 5 in the evening there would be 'PARAPADU'. As I went there early, I sat in some corner. A few

yards off I found two Vaishnavites shouting in the most abeusive language for about an hour. As I had heard about the long Thengalai Vadagalai dispute, I at first thought that it was one such. But as I listened I came to know that it was not the old maladi but a new disease—a civil dispute among the Thengalais. I came to know that the victim of their choice language was neither there, nor in the town—nay not even in the district. I could not understand why these people should abuse an absentee person and that in the most obscene language. When I enquired about this I came to know something about the truth.

On 22-10-44, the 'THIRUNAKSHATRAM' of Sri Manavala Mamuni was celebrated on a grand scale, after a break of 100 years. Next night, elated with joy, Sri. P. B. Annangarachariar performed a "Shahasra Nama Archanai" to Manavala Mamuni. He did it for about 1 or 1½ hours. He was chanting the 'Namavali' and the Archaka was offering the Thulasi. The Archaka is the owner of the Manavala Mamuni Shrine. He did the Archana as P. B. Annangarachariar desired. The moment the Archana was over two elderly men got up and protested to Annangarachariar for what he did. The present dispute is the off-shoot.

It is strange how this small incident has developed. It seems for all this misunderstanding

there is no other reason. Nobody will think otherwise than the "Sahasranama Archanai" is a good thing. Was the Namavali on some other deity? No, No, All were unanimous that the 'Namavali' was only in praise of Sri Manavala Mamuni. I saw the same 'Namavali' printed in Telugu and Devanagiri Scripts and published. It is incomprehensible how this misunder-standing could be the off-shoot of these beautiful strotras. Let us assume then, that this Sahasranama Archanai is a bad thing. He that did this is not one who has come from the Mars; he is a friend and ally of his accusers. All agree that these were moving on good terms. Then could not have these men asked Sri P. B. Annangarachariar not to do the Archanai even when he began to do. From the beginning to the end these men were sitting there. Did they not know that it was bad if indeed it is? Or is it that they did not think so? Why the axe when they could have nipped in the bud? Why then the abuse after an hour? If in spite of protest even at the beginning and if that was brushed aside, there could then be some justification for this abuse. The 'YUDDHAKANDA' is not at the beginning of Sri Ramayana; it is only at the end; it is the climax and not the prelude. Let this pass.

But there is one important thing for all to note. P. B. Annangarachariar did not do the Ar

chanai with his own hands touching the deity. It is the Archaka who is a leader of the Thengalai community, who did the Archanai with 'Thulasi' with his own hands. P. B. Annangarachariar was only chanting the Namavali standing at a distance; he did nothing else. This chanting of Namavali, if he did even before Devarajaswami, Sri Ranganadha, Venkatachalapathi, nobody could with reason protest, much less obstruct him. Perhaps the Archaka may be asked as to why he takes part by throwing the Thulasi at the deity even as the 'Namavalai' is chanted. Even then the Archaka can be questioned if at all by his senior officer or Trustee of the temple. Let us assume that those who protested have the authority and power to question. They should have asked the Archaka to explain and that at the beginning.

It is strange how this small incident has grown beyond all proportions and is till going on the wrong track. We must be careful in finding out where the guilt lies.

We are not in the least concerned with the personal abuses. It is but human to err. The wise are greatful to those critics who point out the mistakes and drawbacks. Anyway we must find out the truth of this incident in the light of the above facts.

(sd) M. Venkatakrishnan,

ஷை இங்கிலிஷ் வியாஸத்தின் ஸாரமான கருத்து.

# காஞ்சீபுரத்தின் நிலைமை.



சென்ற 29—10—44 தேதியில் நான் காஞ்சீபுரம் வரதராஜனை ஸேவிக்கவேணுமென்று போயிருந்தேன். அன்றையதினம் ஏகாதசி யுத்ஸவமாகவுமிருந்தது. ஸாயங்காலம் 5 மணிக்கு பெருமாள் புறப்பாடு ஆகுமென்று தெரிந்து நான் ஸன்னிதிக்குப்போய் புறப்பாட்டை யெதிர் பார்த்துக்கொண்டு ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தேன். அதே ஸமயத்தில் இரண்டு ஸ்ரீ வைஷ்ணவர்கள் அங்கே மிகவும் அருவருக்கத்தக்க துர்பாஷைகளான வார்த்தைகளை சுமார் அரைமணிகாலம் சரமாரியாகப் பொழிந்துகொண்டிருந்தார்கள். ஷை கோவிலில் வெகுநாளாகத் தென்கலை வடகலை விவாதம் தொடர்ந்து வருகிறதென்று நான் கேட்டிருந்தபடியால் அந்த சண்டைதான் ஏதாவது கிளம்பிற்றோ என்று முதலில் நினைத்தேன். கவனித்ததில் அந்த சண்டையன்று என்றும், தென்கலைக்குள்ளேயே பிரபலமான மனஸ்தாபம் என்றும் தெரியவந்தது. அந்த சமயத்தில் எவரைக்குறித்து பிரபலமான தூஷணைகள் நடந்துகொண்டிருந்ததோ அந்த நபர் அவ்விடத்திலுமில்லை, அந்தவூரிலுமில்லை, அந்தஜில்லாவிலுமில்லையென்றும் தெரிந்தது. எதிரி இல்லாதவிடத்தில் ஏதுக்கு இப்படி அநாவச்யகமாக பெருமாள் ஸன்னிதி முன்னிலையில் கர்ணகடூரமான துர்ப்பாஷைகளைப் பொழிகிறார்கள் என்பது எனக்கு விளங்கவில்லை.

இவ்வளவு மனஸ்தாபத்திற்கு மூலம் என்ன என்று விசாரித்ததில், பலபேர்களாலும் உண்மை தெரியவந்தது. அதாவது—22-10-44ல் அந்த ஸன்னிதியில் மணவாளமாமுனிகளின் திருநக்ஷத்ரோத்ஸவம் விசேஷவைபவமாக

நடைபெற்றது. கீழே 100 வருஷகாலம் இல்லாத ஒரு வைபவம் நடந்தேறியதாம். அந்த சங்க்ராஷத்தினல் P. B. அண்ணங்கராசாரியர் என்பவர் மறுநாள் இரவு 8 மணிக்கு கோஷ்டியில் ஸ்ரீ மணவாளமாமுனிகளுக்கு ஒரு ஸஹஸ்ர நாமார்ச்சனை செய்துவைத்தாராம். அந்த அர்ச்சனை 1½ மணிகாலம் நடந்ததாம். நாமாவளிகளை ஸ்ரீ ஸ்வாமி சொல்லிவர, பூஜை செய்பவர் திருத்துழாய் தளங்களால் அர்ச்சனை செய்தாராம். அவர்தான் அந்த ஸன்னிதிக்கு ஸொந்தக்காரராம். அவர் இஷ்டப்பட்டு விரும்பி அந்த அர்ச்சனையை நடத்திவைத்தாராம். ஸ்ரீ அர்ச்சனை முடிந்தவுடனே அவ்விடத்திலேயே இரண்டு நபர்கள் அவ்வர்ச்சனைக்காக அந்த அண்ணங்கராசாரியரை எதிர்த்துப் பேசினார்களாம். அது சம்பந்தமாகவே விவாதம் முற்றி வளர்ந்ததென்று தெரியவந்தது.

மனஸ்தாபங்கள் முற்றியிருப்பதைப்பார்த்தால் வெகு ஆச்சரியமாக இருக்கிறது. இவ்வளவு மனஸ்தாபத்திற்கும் ஸஹஸ்ரநாமார்ச்சனை நடந்தது தவிர வேறு ஒரு காரணமுமில்லையென்று திண்ணமாகத் தெரிகிறது. ஸஹஸ்ரநாமார்ச்சனை யென்பது புண்யகார்யமேயொழிய பாபகார்யமென்று யாரும் நினைக்க முடியாது. இதர தெய்வங்களின் நாமங்களைக் கொண்டு அர்ச்சனை நடந்துவிட்டதா என்ன? என்று கேட்டேன். இல்லையில்லை. மணவாளமாமுனிகளின் வைபவங்களைக் கொண்ட நாமாவளிகளினலேயே அர்ச்சனை நடந்ததென்று யாவரும் சொன்னார்கள். அந்த ஸஹஸ்ரநாமம் தெலுங்குலிபியிலும் தேவநாகரிலிபியிலும் அச்சிட்டு பிரசுரமாகியிருப்பதையும் நான்பார்த்தேன். ஆசார்யரை அழகாக ஸ்தோத்திரம் செய்ததற்காக இவ்வளவு மனஸ்தாபம் எப்படியுண்டாயிற்றென்று விளங்கவேயில்லை.

இந்த ஸஹஸ்ரநாமார்ச்சனை செய்யத்தகாத கெட்ட காரியம் என்றே வைத்துக் கொள்வோம். இந்த கெட்ட காரியத்தைச் செய்தவர் த்வீபாந்தரத்திலிருந்து வந்து விடவில்லை. மனஸ்தாபப்பட்டவர்களோடு ஒத்துழைக்கும் நபரே இவர். இவர்கள் ஒருவர்க்கொருவர் நேசமாகப் பேசிக் கொண்டிருந்தவர்களே யென்பதை யாவரும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். அப்படியிருக்கும்போது, அர்ச்சனை ஆரம்பிக்கும் பொழுதே அந்த இரண்டு நபர்கள் அருகே வந்து 'இது நடக்கத் தகாதகாரியம், இதை நிறுத்திவிடுவதுநலம்' என்று ஹிதமாகச் சொல்லியிருக்கக் கூடாதா? அர்ச்சனை ஆரம்பித்த சமயத்தில் அந்த நபர்கள் அங்கே இல்லை என்று சொல்வதற்கும் இடமில்லாதபடி ஆரம்பம் முதல் முடிவுவரையில் அங்கேயே எதிரிலேயே உட்கார்ந்திருந்தார்களாம். இது தப்புக்காரியமென்று ஆரம்பத்திலேயே இவர்களுக்குத் தெரியவில்லையா? தோன்றவில்லையா? நகத்தால் கிள்ளவேண்டியதை கோடாலியினால் பிளப்பதுபோல் மிகவும் எளிதாக நிறுத்தக்கூடிய இந்தகாரியத்தை ஒன்றரை மணிகாலம் பொறுத்திருந்து பிறகு தூஷித்தது ஏனோலே. ஆரம்பத்திலேயே நல்லதனமாகச் சொல்லியும் அவர் கேளாமல் ஜபிருதஸ்தாகவே நடத்தியிருந்தால் பிறகு எவ்வளவும் தூஷிக்கலாமே ஸ்ரீராமாயணத்தின் ஆரம்பத்திலேயே யுத்தகாண்டம் இல்லையே. முடிவிலன்றோ யுத்தகாண்டமிருக்கிறது. இந்த விஷயம் இருக்கட்டும்.

இங்கு முக்கியமான விஷயம் எல்லாரும் கவனிக்க வேண்டியது ஒன்றுண்டு. அண்ணங்கராசாரியர் மணவாளமாமுனிகள் விக்ரஹத்தை தன்கையால் தொட்டு தாமே அர்ச்சனை செய்துவிடவில்லை. அர்ச்சகர் என்று ஏற்பட்டிருக்கிற ஒரு பெரியவர் (தென்கலை லீடர்) தன்கையால் 1008

தடவை துளஸீதளங்களையிட்டு அர்ச்சனை செய்திருக்கிறார். அண்ணங்கராசாரியர் செய்த காரியம் என்னவென்றால் தாம் தூரமாக நின்றுகொண்டு தம்வாயினால் நாமாவளிகளைச் சொல்லிக் கொண்டிருந்தது தவிர வேறொன்றும் செய்யவில்லை. இந்த காரியத்தை இவர் தேவராஜஸ்வாமி முன்னிலையிலும் வேங்கடாசலபதி ஸ்வாமி முன்னிலையிலும் ஸ்ரீரங்கநாதஸ்வாமி முன்னிலையிலும் செய்தாலும்கூட இதைத்தடுக்கவாவது ஆக்ஷேபிக்கவாவது நியாயமிருப்பதாகத் தெரியவில்லை. "அந்த நாமாவளிக்குச் சரியாக துளஸீதளங்களைப் போட்டு நீர் ஏன் அர்ச்சனை செய்தீர்?" என்று ஒருக்கால் அர்ச்சகரைக் கேட்கலாமோ என்னமோ? அப்படி கேட்கலாமானாலும் கோவிலில் அதிகாரம் செலுத்தக்கூடிய மேலதிகாரிகள் கேட்கத்தக்கதாகும்.

இப்படிப்பட்ட ருஜுமார்க்கங்களுக்கு நேர்விரோதமாக மனஸ்தாபங்கள் ஏற்பட்டதும் அது அளவுமீறி வளர்ந்து கொண்டுபோவதும் ஆச்சர்யமே. இந்தவிஷயத்தில் குற்றம் எங்கே தேங்கியிருக்கிறதென்பதை புத்திமான்கள் ஆலோசிக்க வேண்டும்.

நபர்களைப்பற்றின தூஷணைகள் நடப்பதில் நமக்கு எள்ளளவும் விசாரமில்லை. இவ்வுலகில் பிறந்த யாவருக்கும் எத்தனையோவிதமான குற்றங்கள் உண்டாவது ஸஹஜமே. குற்றங்களை யெடுத்துக் கூறுகிறவர்களிடத்திலே விவேகிகள் பெருநன்றி பாராட்டுவர்கள்.

(கையொப்பம்)

எம். வெங்கடகிருஷ்ணன்.

# அடியேனெழுதிய பதில் கடிதத்தின் ஸாராம்சமும் முடிவுரையும்.

---

தேவரீருடைய கடிதம் பார்த்து மிக வருந்தினேன். தேவரீர் மன்னிப்புக் கேட்கவேண்டிய அவசியம் இல்லையே. பெரியாருடைய திருவுள்ளத்தை நோவுபடுத்தினவன் அடியேன். அநுதாபம் கொள்ளவேண்டியவன் அடியேன். *மத்பாபமேவாத்ர நிமித்தமாஸீத்* என்று பரதாழ்வான் கூறினபடிக்கும் *நானே தானாயிடுக* என்று ஆண்டாளருளிச் செய்தபடிக்கும் குற்றம் அடியேன்பக்கலுள்ளது. உண்மையில் குங்குமம் சுமந்ததுவே அபசாரஹேதுவாயிற்று. அதைப் பொறுப்பிக்கவேண்டிய கடமை அடியேனுடையதன்றோ.

அடியேன் அபரிமிதமாகக் கற்றவன் என்கிற செருக்கு உடையவனே. ஆனாலும் தெரிந்துகொண்டவற்றில் சிறிதளவுகூட அனுட்டிக்க பாக்கியமில்லையே யென்கிற வருத்தமுமுடையேன். ஸ்ரீவசநபூஷணத்தில் (3—45.) சூர்ணையின் வியாக்கியானத்தில் (ஆய்ப்படியில்) ஒரு இதிஹாஸம் காண்கிறது. அதாவது, "பட்டர் ஒருநாள் பெருமாள் ஸந்நிதியிலே அநுஸந்தானம் பண்ணாநிற்க, சிலர் செவி பொறுக்கவொண்ணாத பருஷோக்தி பண்ணக்கேட்டு, சாத்தின திருவாழி மோதிரத்தையும் திருப்பரியட்டத்தையும் கொடுத்தருளி, முதலிகளைப்பார்த்து இவர்கள் பருஷித்ததுக்கு நான் அஞ்சிக் கொடுத்தேனன்று, நாமறியாத தோஷங்களையும் பெருமாள் திருச்செவி சாத்தும்படி சொன்ன உபகாரத்தைப்பற்றிக் கொடுத்தேனத்தனை...... என்றருளிச் செய்தார்" என்றுள்ளது. இந்த இதிஹாஸத்தினால் தெரியவந்ததென்ன? *ஸ்ரீபராசரபட்டார்ய: ஸ்ரீரங்கேச புரோஹித:* என்கிற தனியனுக்கு இணங்க பட்டர்

ஸ்ரீரங்கநாதன் ஸந்நிதியில் பலவும் விண்ணப்பம் செய்ய நியமனம் பெற்றவராதலால் அப்படி விண்ணப்பஞ் செய்து கொண்டிருக்கையில் அது பொறாத சிலர் கர்ணகடூரமாக நிந்தித்தார்களாம். அதற்காக பட்டர் சிறிதும் திருவுள்ளம் கன்றாமல் அந்த தூஷகர்களையும் மஹோபகாரகர்களாகக் கொண்டு அவர்களுக்கு பட்டு பீதாம்பரங்களும் ஆபரணங்களும் பரிசளித்தாராம்.

இப்படியே நம்பிள்ளை விஷயத்திலும் ஒரு இதிஹாஸமுண்டு. உபதேசரத்தினமாலையில்* துன்னுபுகழ்க்கந்தாடைத் தோழப்பர்* என்ற பாசுரத்தின் வியாக்கியானத்தில் அது விசதம். அதாவது, கோயிலில் நம்பிள்ளை ஜ்ஞான ஸம்ருத்தியோடும் சிஷ்யஸம்பத்தோடும் நிகரற்று விளங்காநிற்க, அதுகண்டு ஸஹிக்கமாட்டாத முதலியாண்டான் திருப்பேரனான கந்தாடைத் தோழப்பர் ஒருநாள் நம்பிள்ளையைப் பெருமாள் கோஷ்டியிலே திரஸ்காரமான வார்த்தைகளைச் சொல்லிப் பரிபவித்துவிட்டுத் திருமாளிகைக் கெழுந்தருளினார். அவருடைய தேவிகள் இந்த அக்ருத்யத்தை ஸந்நிதியிலே தான் நேரில் பார்த்திருந்தவளாகையாலே கண்ணுங் கண்ணீருமாக வந்து 'அந்தோ! இப்படியும் ஒரு மஹாசார்யர் திருவடிகளிலே அபசாரப்படுவீரோ? உமக்கு உய்யும் விரகுண்டோ? என்று பலவும் சொல்லி அநுதாபத்தையுண்டாக்க, தோழப்பரும் அநுதபித்து நம்பிள்ளை திருவடிகளிலே சென்று க்ஷமைவேண்ட வேணுமென்று பாரித்திருந்தார். அதற்குள்ளே நம்பிள்ளை தாமே தோழப்பர் திருமாளிகையேற வந்து வேறற்ற மரம்போலே விழுந்து தெண்டனிட்டு, தேவரீருடைய திருவுள்ளம் கன்றும்படி வர்த்தித்தவடியேனுக்கு தேவரீருடைய க்ஷமையல்லது புகலில்லை யென்று பலவுமருளிச் செய்து தாம் க்ஷாமணம்

பண்ணிக் கொண்டாராம். அப்போது தோழப்பர் அந்த மஹா குணத்துக்கு விஸ்மயப்பட்டு "ஸ்வாமிந்! தேவரீரை இத்தனைநாளும் சிறிது பேர்களுக்கு ஆசார்யராக எண்ணியிருந்தேன்; இப்போது லோகத்துக்கெல்லாம் ஆசார்யர் தேவரீர் என்று திண்ணமாகக் கொண்டேன்" என்றாராம். அதுகாரணமாகப் பின்னை உலகாரியனென்னும் பேர் நம் பிள்ளைக் கோங்கி விலகாமல் நின்றதென்றும் மேல்.

இப்படிப்பட்ட இதிஹாஸங்களை நாம் பிறர்க்கு எடுத்துரைக்கும்போது கல்லும் கரையும்படி உரைக்கின்றோம். கேட்பவர்களும் கண்ணும் கண்ணீருமாயிருந்து புளகாஞ்சிதராய்க் கேட்கிறார்கள். என்ன லாபம்? இதை அணுவளவும் ஸ்வாநுஷ்டானத்தில் கொண்டுவர முடியவில்லையேயென்று உண்மையில் அடியேன் அநுதபிக்கிறேன். பட்டர் நம்பிள்ளை முதலான மஹா மஹாசார்யர்கள் எங்கே? நாயினும் கடையேனான அடியேன் எங்கே? ஆனாலும், அக்காலத்தில் அவர்கள் ப்ராக்ருதர்களிடம் திரஸ்கார மொழிகளைப் பெற்றது போல இக்காலத்தில் நாமும் பெறுகிறோம் என்று இந்த வகையினால் மாத்திரம் அவர்களோடு அடியேன் ஸாம்யம் பெறலாம் போலும். அப்படியெல்லாம் மஹாகுணம் காட்டியருளின பேராசிரியர்களைப் போற்றுமவனென்று அந்தோ! அடியேன் பேர்சுமப்பது மாத்திரமேயொழிய அந்த மஹாகுணத்தில் ஏகதேசமும் அநுஸரிக்கமுடியவில்லையே யென்று உள்ளூறப் பரிதாபமேயுடையேன். *வெள்கிப்போ யென்னுள்ளே நான் விலவறச் சிரித்திடுகின்றேன்.

* திகம்பரஜநே க்ராமே ஹாஸ்ய: கௌபீனவாந் நர:* [ஆடையுடாதார் நிறைந்த வூரில் ஆடையுடுப்பவன் ஏசுத்தகுந்தவன்] என்கிற ஸுபாஷிதத்தை அடியேன்

நன்கு கற்றிருந்தும் அதன்படி ஆசரிக்கமாட்டாத பாவியேனாயினேன். மஹான்களின் திருவுள்ளம் கன்றும்படி கற்கவும் கற்பிக்கவும் கல்வியைப் பயன் பெறுத்தவும் எதற்காக புத்திப்ரதானம் செய்தருளினார் மாமுனிகள்! என்று தெளியகில்லேன்.

முடிவாக ஒன்றே விஜ்ஞாபிக்கின்றேன். மணவாள மாமுனிகளைப் போற்றும் இந்த ஸம்பிரதாயத்தில் பல்லாயிரவர் மஹாபண்டிதர்களாகவும் மஹாகவிகளாகவும் தோன்றியிருக்கலாம். ஆனாலும் மாமுனிகளின் காலத்திலிருந்த சிஷ்யர்கள் வட தென் மொழிகளில் அற்புதமான துதிகளை அமைத்தார்களேயல்லது, பிற்காலத்து ஒரு வித்வானும் தன்னுடைய வாக்கை மணவாள மாமுனிகளுக்குத் தந்து ஜன்ம ஸாபல்யம் பெறவில்லை. பெற்றதாக எனக்குத்தெரியவில்லை. உடையவர்க்கு நூற்றந்தாதி யருளிச்செய்த அமுதனார் *நினையார் பிறவியை* என்கிற பாசுரத்தில் என்ன அருளிச் செய்திருக்கிறாரென்று பார்க்கவேணும். [இராமானுசனை இருங்கவிகள் புனையார்; புனையும் பெரியவர் தாள்களில் பூந் தொடையல் வனையார்] என்று வயிறெரிகிறார். ஐயோ! எம்பெருமானாரைக் குறித்துப் பிரபந்தம் பாடுவார் ஒருவருமில்லையே, தாங்கள் பாட மாட்டிற்றிலராகிலும் கவிபாடவல்லார்சிலருண்டாகில் அவர்களை ஆமோதிக்கலாமே, அதுவும் செய்யாதே அவர்களையும் பழித்துக் கொண்டு மருள் சுரந்து பிறவிக் கடலிலேயே துவள்கின்றார்களே! என்று வயிறெரிந்துள்ளார். அந்த வயிற்றெரிச்சல் தீர அடியேனொருவனே அவ்வெம்பெருமானாருடைய புநராவதாரமான மணவாள மாமுனிகளை எவ்வுலகத்துக் கவிகளும் வியக்குமாறு ஆயிரம் சுலோகங்கள் கொண்ட இருபது ஸ்துதிகளாலே துதித்து, இன்னமும் துதிகளையியற்றிக்கொண்டு

* இல்லையெனக் கெதிரில்லை யெனக் கெதிரில்லை யெனக்கெதிரே * என்று செருக்கிக் களித்து * க்ருணீக்ருத விரிஞ்சாதி நிரங்குச விபூதிகனாய் விளங்காநின்றேன்.

இந்த ஸ்துதிகளெல்லாவற்றுக்கும் சேர்ந்து ஸ்ரீவைஷ்ணவ ஸௌபாக்ய மென்று அடியேன் பெயரிட்டேன். "ஸ்ரீசைலேச பாதுகாஸஹஸ்ரம்" என்று பெயரிடத் தகுமென்றார் விஜயநகரத்திலொரு மஹாபண்டிதர். ஸ்ரீசைலேசரென்று திருவாய் மொழிப்பிள்ளைக்குத் திருநாமம். அவருடைய பாதுகை—மணவாளமாமுனிகள். அவர் விஷயமான ஸஹஸ்ரம் என்றபடி.

மேற்குறித்த ஸ்துதிகளிலுள்ள சொல்லின்பம் பொருளின்பம் முதலிய பல்வகையின்பங்களையும் பக்தர்கள் நன்கு அநுபவிக்க வேணுமென்றே இவை பெரும்பாலும் தமிழுரையோடுங்கூட அச்சிடப்பட்டுள்ளன. இச்சிறு நூலோடு அநுபந்தமாகவும் அவை சேர்க்கப் படுகின்றன.

நம்மாழ்வார் திருவிருத்தத்தில் *நீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூ வுண்டுகளித்துழல்வீர்...... வைகுந்தமன்னாள் குழல்வாய் விரைபோல் விண்டு கள்வாரும் மலருளவோ நும் வியலிடத்தே *என்றருளிச்செய்ததற்கு ஆழ்ந்த ஸ்வாபதேசம் கூறுமவர்கள் 'உலகில் எத்தனையோ வாக்குக்கள் தோன்றியிருக்கின்றனவே, என்னுடைய திருவாக்குப்போல எங்கேனும் நீங்கள் கண்டதுண்டோ?' என்று ஆழ்வார்தாமே சில ரஸிகர்களைக் கேட்பதாகக் கூறுவதுண்டு. அப்படி மறைத்துச் சொல்லாதே ஸுவ்யக்தமாக அடியேன் சொல்லுவதாவது- ஸ்ரீராம க்ருஷ்ணாத்யவதார விஷயமாகவும் அநேக திவ்யதேச விஷயமாகவும் மற்றும்பல ஆசார்யர்கள் விஷயமாகவும், அருளிச்செயல்களுக்கு மொழிபெயர்ப்பாகவும் அடியேன் இயற்றி வெளியிட்டுள்ள ஸ்துதிகளும் க்ருதிகளும் கிடக்கட்டும். அவைபோன்ற க்ருதிகளை இயற்றவல்ல வித்வான்கள் உலகில் பலர் இருக்கக்கூடும். கேண்மின். மாமுனிகள் விஷயமாக அடியேனியற்றி

யுள்ள ஸ்துதிகள் வேறொருவர்க்கும் நிலமன்று. நில மாகுமானால், இதோ நான் இயற்றினேன் காண் என்று இயற்றிக் காட்ட முன்வருபவர்கள் அவசியம் வருக வருக வருக. பொலிக பொலிக பொலிக. அடியேன் மாமுனி களுக்கு ஆயிரத்தெட்டு நாமாவளிகளும் நூற்றெட்டு நாமா வளிகளும் விஜ்ஞாபித்தேன். இருபத்தெட்டு நாமாவளிகளை யாவது ஒருவர் இயற்றிக் காட்டினால் நன்றே. அதற்குக் கூட பாக்கியம் பெற்றவர் இல்லையென்றே கூறி நாவலிட டுழிதருவேன். முக்கி முக்கியியற்றினால் அசடு பிசடாகவும் தஸ்கர வ்ருத்தியாகவும் இருபது முப்பது நாமாவளிகள் இயற்றலாம் சிலர். அதுவும் வீம்புக்கு வேட்டையாடுகிற முறையே. 'உலகில் வித்வான்களில்லையா? கவிகளில் லையா? இதென்ன செருக்கு மொழி?' என்று பலரும் நினைக்கலாம், பேசலாம். அடியேனைக் கபளீகரிக்கவல்ல வித்வன்மணிகள் பலபலரிருக்கலாம். அதில் விவாதமில்லை. மாமுனிகளின் பெருமைகளை உள்ளபடி அறிந்தபேர்களும் அவருடைய திருவருட் பெருக்கைக் கொள்ளை கொண்ட பேர்களும் கடல் சூழ்ந்த இம்மண்ணுலகில் வேறொருவர் இப்போதில்லைஇனிமேலு முளராகார் என்று குடப்பாம்பில் கையிட்டுரைப்பேன். உள்ள விஷயமிதுவன்றோ.

நம்மாழ்வார் *இன்கவிபாடும் பரமகவிகளால் தன் கவி தான் தன்னைப் பாடுவியாது* என்றும் *பண்ணார்பாடலின் கவிகள் யானாய்த் தன்னைத் தான் பாடித் தென்னாவென்னு மென்னம்மான்* என்று மிவை முதலான பாசுரங்களினால் என்ன ஆனந்த மடைந்தாரோ அவ்வானந்தம் அடியேனொ ருவனுக்கே அஸாதாரணம். முன்னோர் தவப்பயனாக இங் ஙனே அடியேன் பெற்ற திருவருளை விளக்குமிச்சிறுநூல் பக்தாம்ருதம் ஸாத்விக சித்த ஹர்ஷணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

**மாமுனிவனருள்விளக்கு முற்றிற்று.**



श्रीः

श्रीमद्वरवरमुनये नमः ।

மணவாளமாமுனிகள் திருவடிகளே சரணம்

श्रीवैष्णवसौभाग्ये

# ॥ श्रीशैलेशदयापात्रस्तोत्रम् ॥

ஸ்ரீவைஷ்ணவ ஸௌபாக்யத்தில்

# ஸ்ரீசைலேசதயாபாத்ரஸ்தோத்ரம்.

——— :(O): ———

शं नो मित्र इतीरयन्तु कतिचिच्छं नो भवत्वर्यमे-
त्येवं केचन चक्षतां मम पुनस्तत्तादृशीषूक्तिषु ।
श्रद्धालेशलवोऽपि नाऽस्ति, सततं जिह्वा ममाम्रेडयेत्
शं नो रम्यवरोपयन्तृयमिराड् भूयादितीमामृचम् ॥ १ ॥

(பொழிப்புரை.) * ஶம் நோ மித்ர: * என்றும் * ஶம் நோ பவத்வர்யமா * என்றும் சொல்லுமவர்கள் அப்படியே சொல்லிக் கொண்டிருக்கட்டும்: அடியேனுக்கு அத்தகைய உக்திகளில் சிறிதும் ஆஸ்தையில்லை; * சம் நோ ரம்யவரோபயந்த்ருயமிராட் பூயாத் * [மணவாள மாமுனிகளே நமக்கு க்ஷேமங்கரராகக் கடவர்] என்னு

மிந்த ருக்கையே எனது நாக்கு அநவரதம் ஆவ்ருத்தி செய்யக்கடவது. (க)

रङ्गं रङ्गमितीरयन्ति कतिचिद्रामानुजेति ब्रुव-
न्त्यन्ये केशव माधवाच्युत हरे नारायणेतीतरे ।
तत्तादृग्वचनानि मा स्म निपतन् कर्णे मदीये पुनः
श्रीमद्रम्यवरोपयन्तृमुनिरित्याख्यैव कर्णामृतम् ॥ २ ॥

* ரங்கம் ரங்கமிதி ப்ரூயாத் க்ஷுதப்ரஸ்கலநாதிஷு * என்கிற சாஸ்த்ரத்தை யடியொற்றி இருமல் தும்மல்களில் ரங்கம் ரங்கமென்பாரும், ஆசார்ய நாம ஸங்கீர்த்தநமே உத்தேச்ய மென்று கொண்டு 'ராமாநுஜ!' என்பாரும், கேசவா! மாதவா! என்று பகவந்நாம கீர்த்தநம் பண்ணுவாரும் இவ்வுலகில் பலர் இருக்கட்டும். அப்படிப்பட்ட கீர்த்தனங்கள் என்காதில் விழவேவேண்டா: மணவாளமாமுனிகளென்கிற திருநாமமே எனக்குக் கர்ணாம்ருதமாகும். (உ)

ईशानोऽपि न दैवतं न च विधिर्नो वासवो नार्यमा
किं तु श्रीपतिरेक एव भगवान्नारायणो दैवतम् ।
इत्येवं कथयन्ति वैदिकवराः चित्तं मदीयं पुनः
सिद्धान्तं सुदृढं बिभर्ति वरयोगीन्द्रः परं दैवतम् ॥ ३ ॥

"சிவன் பிரமன் இந்திரன் ஸூர்யன் இவர்கள் ஒருவரும் தெய்வமன்று, ஸ்ரீமந் நாராயணனே பரதெய்வம்" என்று வைதிகர்களின் ஸித்தாந்த மிருந்தாலும் அடியே

னுள்ளத்திற் பதிந்த ஸித்தாந்தம் மணவாளமாமுனிகளே பரதெய்வமென்று. (௩)

शक्तो नैव रमापतिस्सुमधुरैस्सूक्तैर्बुधानां मनो
हर्तुं, किंतु पराशरप्रभृतिभिर्वञ्च्यामहे तद्गिरा।
आचार्यो वरयोगिराडिह भुवि स्वैरं समेत्य स्वयं
सूक्तीर्दिव्यसुधामयीरुपदिशन् विद्वन्मनः कर्षति ॥ ४ ॥

எம்பெருமானே பரதெய்வமென்று கொண்டாடப்பட்டாலும் அப்பெருமான் செவிக்கினிய செஞ்சொற்களாலே விவேகிகளின் மனத்தைக் கவர வல்லவனல்லன்: ஏன்? ஸ்ரீ விஷ்ணு புராணம் பகவத்கீதை முதலியவற்றில் அப்பெருமானருளிச்செய்த திவ்ய ஸூக்திகள் பல இல்லையோ வென்னில், வ்யாஸ பராசராதி மஹர்ஷிகள் எதையோ எழுதிவைத்து பகவத்வாக்யமாக நம்மை வஞ்சிக்கிறார்களத்தனை; மணவாளமாமுனிகளோ வென்னில் அப்படியல்லாமல் நேராகத் திருவவதரித்தருளி அமுதமன்ன மென்மொழிகளைத் தாமே யருளிச்செய்து அறிஞர்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றார். (௪)

ऐश्वर्यं किमपि प्रपद्य कतिचिल्लक्ष्मीकटाक्षोदितं
हन्त ! स्वानभिमन्वते निरुपमान् किं नश्वरैश्वर्यतः ।
अत्रामुत्र च नित्यभोग्यमतुलं श्रीरम्ययोगीश्वर-
श्रीसूक्त्याह्वयशेवधिं निरवधिं लब्ध्वा सुधन्या वयम् ॥

சிலர் லக்ஷ்மீகடாக்ஷத்தாலாகும் சிறிது செல்வத்தைப்பெற்றுத் தங்களை ஒப்பற்றவர்களாக மதிக்கின்றார்கள்; அந்த அழியுஞ் செல்வத்தினால் என்னாகும்? உபய விபூதியிலும் நித்யபோக்யமும் எல்லையற்றதுமான நிதி அடியேனுக்குக் கிடைத்திருக்கின்றது; அந்த நிதிக்கு மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தியென்று பெயர்; அப்படிப்பட்ட நிதியைப் பெற்றுள்ள அடியேனே மிகவும் தன்யன்.

(ரு)

लक्ष्मीशो भगवान् पुरा रघुपतिः कृष्णश्च भूत्वा क्षितौ
विश्वामित्रमुखेषु शिष्य इव सन् वैरस्यमेवावहत् ।
अर्चायामथ सोऽभिराममनघं दिव्यं गुरुं दुस्त्यजं
प्रेप्सुः श्रीवरयोगिनं गुरुपदे विन्यस्य धन्यस्सदा ॥ ६ ॥

எம்பெருமான் முன்பு ராமபிரானும் கண்ணபிரானும் அவதரித்து விச்வாமித்ரர் ஸாந்தீபிநிபோல்வாரிடத்தில் சிஷ்யனாயிருந்து, அவர்கள் ஜிதேந்த்ரியர்களன்றிக்கே நித்யஸம்ஸாரிகளாயிருக்கும் படியைப் பிறகு தெரிந்துகொண்டு அந்தோ! ஆசார்யத்வ பூர்த்தியில்லாத இவர்களையா நாம் ஆசார்யராக வரித்தோமென்று எம்பெருமான் திருவுள்ளம் வெறுப்புற்றேயிருந்தது. அக்குறையை அர்ச்சாவதாரத்தில் தீர்த்துக்கொள்ள விரும்பி ஒருநாளும் விடவொண்ணாத ஆசார்யரைப் பெற விரும்பி ஆசார்யத்வ பூர்த்தியுடைய மணவாளமாமுனிகளை ஆசார்யராக வரித்து க்ருதக்ருத்யனாயினன். (சூ)

एष श्रीवरयोगिराड्विशदवाक्चूडामणित्वप्रथां
धत्ते, सत्यमुपाधिरेष कलयाऽप्यन्योचितो नैव हि ।
निस्सन्देहविपर्ययं सुललितं व्यर्थोक्तिवैदेशिकं
सारस्वादुवचोमयं विवरणं विख्यातमस्यैव हि ॥ ७ ॥

மணவாளமாமுனிகளுக்கு விசதவாக் சிகாமணி யென்கிறவிருது ப்ரஸித்தமானது; உண்மையில் இந்த விருது இவரொருவர்க்கே தகுமேயன்றி மற்றெவர்க்கும் ஏற்காது. ஏனெனில், ஸந்தேஹிக்க இடமில்லாமலும் விபரீதார்த்தங்கொள்ள வொட்டாமலும் வம்புவார்த்தைகளுக்குச் சிறிதும் இடமளிக்காமலும் மிகவும் லலிதமாய் பரமபோக்யமான ஸ்ரீஸூக்திகள் நிரம்பிய வியாக்கியானங்களை அருளிச் செய்தவரென்கிற புகழ் மாமுனிகளுக்கே அஸாதாரணமன்றோ. (எ)

(अथ वा श्लोकान्तरम् ।)

एतत्पथ्यवचो मदीयमनघं कर्णामृतं श्रूयतां
श्रीमत्सुन्दरयोगिनस्सुमधुरा सूक्तिस्सदा सेव्यताम् ।
तत्तादृग्गुणशेवधिर्गुरुवरो यः कोऽपि वा भूतले
भूतः किं भवितेति शुद्धधिषणैस्सद्भिः क्षणं चिन्त्यताम् ॥

எனது செவிக்கினியதோர் செஞ்சொல்லைக் கேண்மின்; மணவாளமாமுனிகளின் மதுரமான ஸ்ரீஸூக்திகளை இடைவிடாது ஸேவித்துப் பாருங்கள்: அவரைப்

போன்ற வேறாசிரியர் இதுகாறும் இக்கிலவுலகில் அவதரித்ததுண்டா? இனியாகிலும் அவதரிக்க முடியுமாவென்று நன்மதியுடையீர்! சிறிது சிந்தித்துப்பாருங்கள். (அ)

शान्तिर्दान्तिरितीदृशा गुणगणा आवश्यका देहिनाम्
इत्येवं बहवो लिखन्ति कृतिषु स्वीयासु गाम्भीर्यतः ।
तत्तादृग्गुणसंपदां निलयनं को वा गुरुस्स्यादिति
स्वान्ते चिन्तयतां मुनिर्वरवरो नित्यप्रतिष्ठो भवेत् ॥ ९ ॥

சமம் தமம் முதலிய ஆத்மகுணங்கள் சேதநர்களுக்கு அவசியம் வேண்டியவையென்றும் அவரவர்கள் தங்கள் நூல்களில் கம்பீரமாக எழுதிவைக்கிறார்கள். ஆனால், அந்தத் திருக்குணங்களுக்குக் கொள்கலமான ஆசிரியர் யாவர்? என்று சிலர் சிந்திக்கப் புகுந்தால் அவர்களின் உள்ளத்தில் மணவாளமாமுனிகளே குடிகொண்டிருக்கக் கூடியவர். மாமுனிகளைப் போன்ற சமதமஸம்பந்நர் வேறொருவருமிலர். (கூ)

अन्तर्वाणिवरानमत्सरधियस्संसेव्य विज्ञापये
प्रेक्षध्वे ननु भूयसीर्गुरुवरैस्तैस्तैः प्रणीताः कृतीः ।
श्रीमद्रम्यवरोपयन्तृमुनिराट्श्रीसूक्तिसौवादवं
किं कस्यापि गुरूत्तमस्य वचसि प्रेक्षि स्फुटं कथ्यताम् ॥

அஸூயை யற்ற வித்வான்களை அடிபணிந்து ஒன்று விண்ணப்பம் செய்கிறேன்; நீங்கள் பலபல ஆசார்யர்கள்

இயற்றிய பல நூல்களைப் பார்த்திருக்கிறீர்களே; மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளிலுள்ள இன்சுவை எந்த ஆசிரியருடைய திருவாக்கிலாவது கண்டதுண்டா? உள்ளவாறுரையீர்.

(௧0)

दम्भं केवलमेकमेव वचसा स्वीयेन संदर्शय-
न्त्याचार्याः कतिचित् किमस्ति फणितौ तेषाम् ऋते दूषणात् ।
भस्मच्छन्न इवानलो गुरुवरो रम्योपयन्ता मुनिः
स्वादिष्ठैर्वचनैर्विनिन्दनकथावैदेशिकैर्भासते ॥ ११ ॥

சில ஆசாரியர்கள் தங்கள் வாக்கினுல் டம்பத்தை மாத்திரமே வெளியிட்டுக் கொள்ளுகிறுர்கள். அவர்களுடைய வாக்குக்களில் பெரும்பாலும் பரநிந்தை தவிர வேறு என்ன காணமுடியும்? நீறுபூத்த நெருப்பு என்னும் படியான மணவாளமாமுனிகள் ஒருவரே பரநிந்தா லேசமுமற்ற பரமபோக்ய ஸ்ரீஸூக்திகளை யருளிச்செய்தவர்.

(௧௧)

अन्तर्मानसमन्यदेव दधते वाच्यन्यदेव ब्रुव-
न्त्यन्ये स्वीयनिबन्धनेषु, बहुशो दक्षा अमी वञ्चने ।
तादृग्दुर्गुणगन्धलेशविधुरः कान्तोपयन्ता मुनिः
श्रीरङ्गेशतपःफलं विजयते सद्भक्तचित्ते सदा ॥ १२ ॥

மற்றையோர்கள் நெஞ்சில் ஒன்றை வைத்துக் கொண்டு வாக்கில் வேறொன்றை வெளியிடுபவர்களாய் நூல்கள் எழுதிப் போருவர்கள்; பெரும்பாலும் அவர்

கள் வஞ்சிக்க வல்லவர்கள்; அப்படிப்பட்ட துர்க்குண லேசமும் அற்றவரான மணவாளமாமுனிகள் ஸ்ரீரங்க நாதனுடைய தவப்பயனாகத் தோன்றினவர்: அவர் எப் போதும் பக்தர்களின் உள்ளத்துள்ளார். (கஉ)

यस्सर्वज्ञ इति प्रसिद्धिमगमत् यं रङ्गराडाश्रयत्
येनारक्ष्यत दर्शनं यतिपतेः यस्मै नतिः श्रेयसी ।
यस्मान्नास्त्यधिको गुरुः भुवि चिरं यस्यैव मन्त्रो जयी
यस्मिन् सन्ति समे गुणा वरवरं योगीश्वरं तं स्तुमः ॥

(இந்தச்லோகத்தில் ஏழு வேற்றுமைகளும் வரிசை யாக வரும்படி தொடையழகு காண்க.) எவர் ஸர்வஜ்ஞ ரென்று புகழ்பெற்றாரோ, எவரை ஸ்ரீரங்கநாதன் ஆசார்யராகக் கொண்டானோ, எவரால் ஸ்ரீராமாநுஜ தர்சநம் காக்கப்பட்டதோ, எவர்பொருட்டு நமஸ்காரம் நன்மைபயக்குமோ, எவரைக்காட்டிலும் மேம்பட்ட ஆசாரியர் இல்லையோ, எவருடைய தனியன் இவ்வுல கில் என்றென்றும் வெற்றிபெற்று விளங்குமோ, எவரி டத்தில் ஸகல திருக்குணங்களும் பொருந்தியுள்ளனவோ அந்த மணவாளமாமுனிகளைப் போற்றுகிறோம்.

आकारं वरयोगिनस्सुमधुरं क्षीरोदधेस्सोदरं
चेतोहारिणमद्वितीयमनघं सेवेत दासः कदा ।
इत्येवं सुचिराद्विचिन्त्य बहुधा दीनं धृताश्रुं च मां
हा हा यश्चरितार्थमाशु कृपयाऽकार्षीत्स योगी महान् ॥

மணவாளமாமுனிகளின் பாற்கடல் போன்று பரம போக்யமான திருமேனியை அடியேன் எப்போது ஸேவிக்கப்பெறுவேனென்று நெடுநாளாகக் கண்ணீர் விட்டழுது நைந்துகிடந்தேன்; அங்ஙனே துவண்டு கிடந்த அடியேனுக்கு மாமுனிகள் ஐயோவென்றிரங்கி அருள்செய்த படியை என் சொல்லுவேன்? அவரே மஹான். (கச)

पथ्यं किंचन वच्मि कर्णकुहरे सानन्दमाकर्ण्यतां
यस्तत्वत्रयटीकया महितया सर्वज्ञभावं निजम् ।
विख्यातं व्यतनोत्तमेनमतुलं कान्तोपयन्त्राह्वयं
योगीन्द्रं सततं निधत्त हृदये नास्त्यन्यतो धन्यता ॥१५॥

காதோடு ஒரு இன்சொல் சொல்லுகேன் கேண்மின்: பிள்ளை லோகாசார்யர் அருளிச்செய்த தத்வத்ரயத்திற்கு மிகச்சிறந்த வியாக்கியானத்தை யருளிச்செய்து தம்முடைய ஸர்வஜ்ஞத்வத்தை விளங்கக் காட்டியருளின மணவாளமாமுனிகளையே அநவரதம் சிந்தை செய்மின்; வேறுவழியால் ஜன்மம் க்ருதார்த்தமாக விரகில்லை. (கரு)

आकाशे यदि विक्षिपन्ति पृथुका जम्बालमेतावता
किं वोभोति, निरीक्षते किल जनस्सर्वोऽपि चर्यामिमाम् ।
स्यादेवं ननु रम्ययोगिफणितिष्वन्यैरधन्यैर्मुधा
निन्दावाग्वितितिर्जडैः प्रलपिता स्वानर्थदा केवलम् ॥ १६ ॥

சிறுவர்கள் (அவிவேகிகள்) சேற்றையெடுத்து ஆகா

சத்தில் விட்டெறிந்தால் என்னுகிற தென்பதை அனை வரும் காணத் தட்டில்லையே. மணவாளமாமுனிகள் விஷயத்திலும் இந்த நியாயமே காணத்தகும். கருவிலே திருவிலாதார் மாமுனிகளின் அமுதமொழிகளில் தூஷணைகளைப் பிதற்றுவது அவர்களுக்கே அநர்த்தத்தை விளைக்குமதாம். (கசு)

तं तं देशिकमादरेण महता तुष्टूषतां धीमताम्
आचार्याननपरान्विहाय तमिमं सेवध्वमित्येव गीः ।
प्रादुर्भावमुपैति, नैवमधुना श्रीरम्ययोगीश्वरं
स्तौम्येषोऽहमहो करोमि शपथं नान्यो गुरुर्वस्तुतः ॥ १७ ॥

உலகில் புத்திமான்கள் அந்தந்த ஆசாரியரைத் துதிக்கும்போது "மற்ற ஆசாரியர்களை விட்டு இவ்வாசிரியரையே தொழுங்கள்" என்று சொல்லுவதுண்டு; அடியேன் மணவாளமாமுனிகளைத் துதிப்பது அந்த முறைமையில் அல்ல; உண்மையில் மாமுனிகளைத் தவிர வேறு ஆசாரியர் இல்லை யென்று ஆணையிட்டுரைப்பேன்.

रङ्गी यस्य गुणान् स्वयं हि सुचिरं संमृश्य शिष्योऽभवत्
तस्मिन् रम्यवरोपयन्तृयमिनि प्रज्ञाविरक्त्यर्णवे ।
आचार्यत्वसमापनं तु समभूदित्येव सर्वे विदुः
तस्मादेव सुधीरमत्र हि शपे नान्योऽस्त्यतो देशिकः ॥१८॥

ஸ்ரீரங்கநாதன் யாவரொரு மணவாளமாமுனிகளின்

திருக்குணங்களை நெடுநாள் ஆராய்ந்து நோக்கி சிஷ்யனானோ அந்த மாமுனிகளுக்குப் பிறகு வேறொரு ஆசாரியர் இருக்கக் கூடாதென்று அவரோடு ஆசார்ய பரம்பரையை ஸமாப்தி செய்துவிட்டான்; (அதாவது) பூருவாசாரியர்கள் என்கிற வியபதேசம் மாமுனிகளோடு முற்றுப்புள்ளி யடைந்திட்டது. இவ்விஷயம் உலகமெல்லாம் அறிந்ததேயாதலால் மாமுனிகளுக்கு மேற்பட்ட ஆசார்யர் இல்லையென்று அடியேன் துணிந்து கூறுகின்றேன். (கஅ)

अत्याश्चर्यमहिष्ठसूक्तिमहितामाचार्यचित्ताह्वयां
लोकाचार्यसहोदरप्रकथितां दिव्यां कृतिं व्याकरोत् ।
विश्वख्यातयशा वरो मुनिवरो व्याख्यामिमां श्रेयसीं
स्वादिष्ठां सततं निषेव्य भजत प्राज्ञाग्रगण्यप्रथाम् ॥ १९ ॥

பிள்ளை லோகாசார்யரின் திருத்தம்பியாரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் அருளிச்செய்த ஆசார்யஹ்ருதயமென்னும் திவ்யக்ரந்தத்தை உலகம் நிறைந்த புகழாளரான மணவாளமாமுனிகள் வியாக்கியானித்தருளினர்; பரமபோக்யமான அந்த வியாக்கியானத்தை இடைவிடாது ஸேவித்தால் ஸர்வஜ்ஞராகப் பெறலாம். (கக)

मन्दानामपि हर्षमप्रतिभटं विश्राणयन्तीर्गिरो
भूयिष्ठा भुवि केवलं करुणया दत्त्वा समुज्जीवयन् ।

आचार्यो वरयोगिराडनुपमो वात्सल्यवारांनिधिः
प्रादाद्यां यतिराजविंशतिमिमां कण्ठे कुरुध्वं सदा ॥

அறிவிலிகளுக்குங்கூட நிகரற்ற ஸந்தோஷத்தை விளைக்கவல்ல பல ஸ்ரீஸூக்திகளைத் தமது நிர்ஹேதுக க்ருபையினாலேயே யளித்து உலகத்தை உய்வித்தருள்பவரான மணவாளமாமுனிகள் திருவாய்மலர்ந்தருளிய யதிராஜவிம்சதியைக் கண்டபாடம் செய்து ஸதா அநுஸந்தியுங்கள். (௨0)

धन्यास्स्याम सदेति ये कुतुकिनस्तैरेतदाकर्ण्यतां
श्रीवाग्भूषणनामकं कृतिवरं लोकार्यसंदर्शितम् ।
श्रीमद्रम्यवरोपयन्तृयमिराड्व्याख्यानरत्नाञ्चितं
शश्वद्देशिकसन्निधौ पठत भो नेतः परा धन्यता ॥ २१ ॥

எப்போதும் நாம் பாக்யசாலிகளாகவே யிருக்க வேணுமென்னும் விருப்புடையீர்! கேண்மின்; மணவாளமாமுனிகளருளிச் செய்த வியாக்கியானத்தோடுகூட ஸ்ரீவசநபூஷண திவ்யசாஸ்த்ரத்தை ஆசார்ய ஸந்நிதியில் அடிக்கடி ஸேவியுங்கள்; இதுவே பரமபாக்யம்; இதற்கு மேற்பட்ட பாக்யமில்லை. (௨௧)

ईर्ष्यादुर्गुणदूरगं शमदमोदन्वन्तमन्यादृश-
प्रज्ञाशेवधिमप्रमेयविभवं श्रीरम्ययोगीश्वरम् ।
मुक्त्वाऽन्यं गुरुमेकमाश्रयति यस्तृप्तिस्तु का नाम भोः
तस्य स्यात् ? परमार्थवेदनकथा न स्याद्धि तस्यायुषि ॥

* பிறர்மினுக்கம் பொறுமையிலாப் பெருமைபெற்று சமதமக்கடலாக விளங்குகின்ற மணவாளமாமுனிகளை விட்டு வேறொரு ஆசார்யரை ஆச்ரயிக்கின்றவர்க்கு என்ன த்ருப்தியுண்டாகும்? அன்னவர்க்கு ஆயுள் முழுவதிலும் உண்மைப் பொருள்களை யுணர்வதற்கு ப்ரஸக்தியில்லையாகுமன்றோ. (உஉ)

भङ्गो नैव कदाऽपि कुत्रचिदपि श्रीरम्ययोगीशितुः
मन्त्रस्य क्षितिमण्डलेऽत्र भवतीत्येतत्तु तत्त्वं परम् ।
सम्यक् चिन्तयतां विशुद्धमनसां चित्ते न तावद्गुरुः
कोऽप्यन्यो विनिधातुमर्हति पदं पश्यन्तु निर्मत्सराः ॥

மணவாளமாமுனிகளின் தனியனுக்கு இப்பூமண்டலத்தில் ஓரிடத்திலும் ஒருபோதும் பங்கம் விளைவதில்லையென்கிற இந்த தத்துவத்தை நன்கு உணரவல்ல மஹான்களின் மனத்தில் மாமுனிகள் தவிர மற்றொரு ஆசாரியர் அடிவைக்க முடியுமோ? அஸூயை யற்றவர்கள் இதனை ஆராய்ந்து பார்க்க. (உங)

अन्याय्यार्थकदम्बकानि बहुशो विक्षिप्य निस्साध्वसं
नास्माभिः क्वचिदप्यपार्थकणिकाऽप्यत्राभ्यधायीति च ।
संलिख्य प्रसभं प्रवञ्च्य यशसा तुङ्गाश्च सन्ति क्षितौ
सन्त्वेते, मुनिरेष एव परमः प्रामाणिकाग्रेसरः ॥ २४ ॥

சிலர் தங்கள் சுவடிகளில் தப்பான அர்த்தங்களையே கூசாமல் பெரும்பாலும் எழுதிவைத்து, அவ்வளவோடு

நில்லாமல் "இதில் தப்பான அர்த்தம் ஒன்றுகூட இல்லை; எல்லாம் மஹாப்ராமாணிகமான அர்த்தமே எழுதிவைத்தோம்" என்றும் ஊடே யூடேயெழுதி உலகத்தை வஞ்சித்துக் கீர்த்தி பெறுவாருளர்; அன்னவர்கள் கிடக்க; மணவாள மாமுனிகளொருவரே பிராமாணிகர்களில் தலைவர். (உச)

कश्चिन्मामिह वेत्ति तत्त्वत इति श्रीवासुदेवः पुरा
गीतायां ननु गायनिस्म तदनु प्रादुर्बभूव क्षितौ ।
श्रीमद्रम्यवरोपयन्तृयमिराडेको गुरुस्तत्त्ववित्
तत्सूक्तिप्रवणा वयं च कतिचित्तत्त्वज्ञभावास्पदम् ॥ २५ ॥

கீதையில் கண்ணபிரான் * கச்சிந்மாம் வேத்தி தத்வத: * என்று என்றைக்கோ சொல்லிவைத்தான்; 'தன்னை யுள்ளபடி யறியவல்லவர் யாரோவொருவர்' என்று சொன்ன அந்த கீதையின்படி மணவாளமாமுனிகளொருவரே தத்வஜ்ஞராகத் திருவவதரித்தவர்; அவருடைய ஸ்ரீஸூக்திகளில் ப்ராவண்ய முடையோமுக்கும் தத்வஜ்ஞபாவனை உரியதேயாம். (உரு)

तर्कव्याकरणादितन्त्रनिचये वैदुष्यमन्यादृशं
स्पष्टीकर्तुमलं यदीयविशदव्याख्यानवैखर्यहो ।
तेनानेन वरोपयन्तृयमिना प्रोक्तां रहस्यत्रय-
व्याख्यां चिन्तय सन्ततं हृदय हे! यद्वैभवं विश्रुतम् ॥

தர்க்கம் வியாகரணம் முதலான ஸகல சாஸ்த்ரங்

களிலும் நிகரற்ற பாண்டித்யத்தை ஸ்பஷ்டமாகக் காட்ட வல்ல வியாக்கியானங்களை யருளிச் செய்தவரான மண வாளமாமுனிகள் திருவாய் மலர்ந்தருளிய நிகரில் புகழ் வாய்ந்த முமுக்ஷுப்படி வியாக்கியானத்தை நெஞ்சே! இடையறுது அநுஸந்திப்பாயாக. (உசு)

यस्य स्वादुवचस्सु तिष्वनुपमा प्रामाणिकत्वप्रथा
यस्मिन्नार्जवमद्वितीयममितं विभ्राजते विश्रुतम् ।
यो लोकार्यगुरूक्तिरक्षणकृते जज्ञे स रम्यो मुनिः
श्रीरङ्गेशमनोहरो विजयते चित्ते ममैवानिशम् ॥ २७ ॥

தம்முடைய பரமமதுரமான ஸ்ரீஸூக்திகளில் தமது பரமப்ராமாணிகத்வத்தை விளங்கவைத்தவரும், குடில புத்தியின்றிக்கே ருஜுபுத்தியாயிருப்பவரும், பிள்ளை யுல காசிரியருடைய ஸ்ரீஸூக்திகளைக் காக்கவே அவதரித்த வரும், ஸ்ரீரங்கநாதனுடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டவருமான மணவாளமாமுனிகள் எனது உள்ளத் துள்ளே யுறைகின்றார். (உஎ)

आदावादिभुजङ्गमोऽथ समभूत्सौमित्रिनामा ततः
श्रीरामानुजयोगिराडुदभवत्पश्चाद्वरो योगिराट् ।
इत्येवं ह्यवतारतत्त्वमखिलास्सन्तो गृणन्ति स्फुटं
यस्याचार्यमणेः, स एष मुनिराडान्ध्यं ममापाहरत् ॥

முதலில் ஆதிசேஷனாயிருந்து பிறகு இளையபெருமா ளாகவும் அதன்பிறகு எம்பெருமானாராகவும் அதற்குப்

பிறகு மணவாளமாமுனிகளாகவும் இங்ஙனே அடைவே திருவவதாரமாயிற்றென்று ஸத்துக்கள் உண்மையுணர்ந்து பேசப்பெற்ற மாமுனிகள் அடியேனுடைய அகவிருளைப் போக்கியருளினர். (உஅ)

दक्षास्सन्ति परश्शताः कविवरा द्वित्रक्षणाभ्यन्तरे
निर्मातुं बहुबन्धबृन्दभरिता बह्वीः कृतीरस्तु तत् ।
श्रीमत्सुन्दरयोगिदिव्यफणितिष्वेकाक्षरस्याग्रतः
नैव स्थातुमलं समस्तकृतयश्चैकीभवन्त्योऽपि ताः ॥ २९ ॥

ஆச்சரியமான பந்தங்களுடன் கூடின பல கவிதைகளைக் கணப்பொழுதில் இயற்றவல்ல கவிச்ரேஷ்டர்கள் பலர் இவ்வுலகிலுளர்; இது கிடக்கட்டும். அவற்றல் என்னபயன்? அவையெல்லாம் ஒன்று கூடினலும் மணவாளமாமுனிகளின் அமுதமென்மொழிகளில் ஒரு அக்ஷரத்திற்கு இணையாகாவென்பது ஸத்யம். (உகூ)

इन्धे सन्ततमस्मदीयहृदये रम्योपयन्ता मुनिः
दुग्धोदध्युपमेयसुन्दरतनुस्वच्छप्रभां भासयन् ।
या स्वप्नेऽपि सुदुर्लभा मम पुनर्जाग्रद्दशायां क्वचित्
प्रादादद्भुतदर्शनं दुरितराश्युन्मूलनं पावनम् ॥ ३० ॥

மணவாளமாமுனிகள் பாற்கடல் போன்ற தமது திருமேனியொளியை என்னெஞ்சினுள்ளே விளங்கக் காட்டியருளா நின்று கொண்டு ஸேவைஸாதிக்கின்றார். கனவிலுங் காண வரிதான அத்திருமேனி விளக்கத்தைப்

பாவியேன் நனவிற் காணுமாறு அருள்செய்த அதிசயம் என்னே.!

(௩௦)

गच्छेयं यदि जातुचिद्दिवमहं तत्रापि रम्योपय-
न्त्राचार्यस्य पदाम्बुजन्मसविधे सर्वास्सपर्याश्चरन् ।
तत्स्वादूक्तिनिषेवणैकरसिको वर्तेय नोचेद्ध्रुवं
भित्त्वा भास्करमण्डलं पुनरपि प्रत्यागतस्स्यां भुवम् ॥ ३१ ॥

ஒருகால் அடியேன் பரமபதத்திற்குச் செல்வேனுயின் அங்கும் மணவாளமாமுனிகளின் திருவடி வாரத்திலேயே ஸகல கைங்கரியங்களையும் செய்துகொண்டு அவருடைய மதுர ஸ்ரீஸூக்திகளையே அநுபவித்துக் கொண்டு வாழக்கடவேன்; இல்லையாகில் ஸூர்யமண்டலத்தைப் பிளந்து கொண்டு மீண்டும் இந் நிலவுலகுக்கே வந்து விடுவேனென்பது திண்ணம். (௩௧)

उर्व्यामत्र जनिर्जुगुप्सिततमेत्याहुर्महान्तोऽखिलाः
दासस्यास्य तु चेतसे न खलु सा वाग्रोचते वस्तुतः ।
यस्मादत्र भुवि स्थितोऽप्यहमहो रम्योपयन्तुर्मुनेः
श्रीसूक्त्याह्वयमद्वितीयममृतं चूषन् सदा हर्षभाक् ॥ ३२ ॥

இவ்விருள் தருமாஞாலத்தில் பிறப்பு வெறுக்கத்தக்கதென்று பெரியார்கள் கூறுகின்றார்களெனினும் அது அடியேனுக்கு ருசிக்கவில்லை; ஏனெனில், அடியேன் இவ்வுலகில் இருந்துகொண்டும் மணவாள மாமுனிகளின் திவ்யஸூக்தியமுதத்தையே பருகிக்கொண்டு எப்போ

தும் ஆனந்தசாலியாகவே யிருக்கிறேனன்றோ! (துன்பமுண்டானாலன்றோ இவ்வுலகவாழ்க்கை வெறுக்கத்தக்கது.)

(अथ वा श्लोकान्तरम् ।)

उक्तं यच्छठवैरिणा भगवता नश्येत्कलिः पश्यते-
त्याम्नाये स्वसमीक्षिते, यतिपतेर्दृष्ट्या तदित्युच्यते ।
स श्रीमान् यतिराड्वरो मुनिवरो भूत्वा स्वकृत्यं पुनः
निश्शेषं प्रसमाप्य, तां शठजितस्सूक्तिं यथार्थां व्यधात् ॥

நம்மாழ்வார் தமது திருவாய்மொழியில் "கலியுங் கெடும் கண்டுகொண்மின்" என்றருளிச்செய்தது எம்பெருமானாரை நோக்கி யென்பர்கள். அவ்வெம்பெருமானார் தாமே மீண்டும் மணவாளமாமுனிகளாகத் திருவவதரித்தருளிக் கலி வித்வம்ஸநமாகிற ஸ்வக்ருத்யத்தைக் குறையறச்செய்து தலைக்கட்டி அவ்வாழ்வார் ஸ்ரீஸூக்தியை யதார்த்தமாக்கி யருளினார். (நங)

णत्वं याति नकार एवमयते षत्वं सकारः क्वचित्
किं भूयःकथनेन ? पाणिनिमुनेस्तन्त्रे बहुर्व्यत्ययः ।
दृश्येत, प्रथितप्रभाववरयोगीन्द्रोक्तिरत्नाकरे
नैव व्यत्ययगन्धलेशकणिकाऽप्यालक्ष्यते लक्ष्यताम् ॥३४॥

பாணினி முனியின் சாஸ்த்ரமான வியாகரணத்தில் விபரீதங்கள் பல காணப்படும். ந - காரம் ண - காரமாய் மாறிவிடும், ஸ - காரம் ஷ - காரமாய் மாறிவிடும். (ப்ர

நயதி, ப்ராணயதி. வி - ஸஹதே, விஷஹதே. இத்யாதிகள் காண்க.) மணவாளமாமுனிகளின் திருவாக்குக்களில் இங்ஙனே ஒரு விபரீதங்கூடக் காணமுடியாது. எதுவும் யதாவத்தாகவே யிருக்கும். இது சாடுக்தி. (௩௪)

आवेशं सकलाश्च सूरिमणयः कासारमुख्यास्तथा
नाथाद्या गुरवश्च सत्यमदधुः श्रीरम्ययोगीश्वरे ।
यद्वा द्राविडसंस्कृतागमततीसौभाग्यसर्वस्वम-
प्येत्रं कामपि मूर्तिमुद्वहदुदैदित्येव निर्धार्यताम् ॥ ३५ ॥

பொய்கையார் முதலான ஆழ்வார்களனைவரும் ஸ்ரீமந்நாதமுனிகள் முதலான ஆசார்யர்களனைவரும் மணவாளமாமுனிகள் பக்கலில் ஆவேசித்தனர் என்னலாம்; அல்லது, வடமொழி தென்மொழி மறைகளின் பாக்ய ஸர்வஸ்வமும் ஒன்றுசேர்ந்து மாமுனிகளாக வடிவு பூண்டு உதித்தது என்று நிஷ்கர்ஷிக்கத் தட்டில்லை. (௩௫)

रङ्गाधीश्वरभाग्यसंततिरहो रम्योपयन्ता यमी-
त्याख्यां लोकविलक्षणां सुमधुरां संगृह्य जज्ञे भुवि ।
इत्येषा प्रतिपत्तिरेव मनसि प्रोज्जृम्भते मामके
भूयिष्ठाऽस्त्युपपत्तिरत्र नियतं सिद्धान्त एषोऽनघः ॥ ३६ ॥

ஸ்ரீரங்கநாதனுடைய பாக்ய பரம்பரையே மணவாள மாமுனிகளென்கிற திருநாமங் கொண்டு உலகில் அவதரித்தது என்கிற ப்ரதிபத்தியே அடியேனது

நெஞ்சில் கொழுந்துவிட்டோங்குகின்றது; இவ் விஷயத்தில் அதிகமான உபபத்தி யிருப்பதால் இதுவே திடமான ஸித்தாந்தமாக வடுக்கும். (௩௬)

णत्वं बाधत इत्युवाच विबुधः कोऽपीति यः पप्रथे
तस्य श्रीमति माधवे हृदयगं वैरं प्रसिद्धं बत ।
तादृक्षं वरयोगिवर्यचरणद्वन्द्वेऽपि ये बिभ्रते
विद्वांसोऽपि भवन्तु ते किमु ततः ? शोच्या हि तेषां गतिः॥

மஹா பண்டிதரென்று புகழ் பெற்ற அப்பயதீக்ஷிதர் நாராயண நாமத்தை சிவபரமாக நயிப்பிக்கவேணுமென்று சிரமப்பட்டு 'ணத்வம் பாதிக்கிறது' என்று சொல்லிக் கையொழிந்தார் என்று ப்ரஸித்தமான விஷயம். அவர்க்கு ஸ்ரீமந் நாராயணனிடத்தில் இருந்த த்வேஷம் உலகமறிந்ததே. அதனால் நாராயணனுக்கு ஒரு குறைவு நேர்ந்ததாகவில்லை. இதுபோலவே, வித்வான்களென்று பேர் படைத்த பிறர்கள் மணவாளமாமுனிகளிடத்தில் மாச்சரியம் கொண்டாலும் அதனால் குறையொன்றுமில்லை; அன்னவர்கள் படும் பாடு சொல்லவேணுமோ? (௩௭)

अल्पीयानहमद्वितीययशसं श्रीरम्ययोगीश्वरं
स्तुत्यं भक्तिधनैः स्तुवन्ननुदिनं जिह्रेमि नैवाल्पशः ।
यस्मादस्य गुरूत्तमस्य सकलं माहात्म्यसारं क्षितौ
अस्यां दासजनोऽयमेव विशदं विज्ञातुमर्होऽभवत् ॥ ३८ ॥

உலகம் நிறைந்த புகழாளரான மணவாள மாமுனிகளை பக்தியிற் சிறந்த மஹான்கள் துதிக்கவேணுமே யன்றி நீசனேன் நிறையொன்றுமிலேன் துதிப்பது தகுதியே யன்று; ஆயினும் அடியேன் ஓயாமல் அவரையே துதித்துக்கொண்டிருக்கிறேன்; இதற்காக நான் சிறிதும் வெட்கப்படுகின்றிலேன்; ஏனெனில், மாமுனிகளின் ஸகல வைபவங்களையும் உள்ளபடி யுணர இவ்வுலகினுள் அடியேனொருவனே பாக்யம் பெற்றேனன்றோ. (௧௮)

वल्लीतुल्यवलग्नशालिललनाश्लेषादिभोगे सुखं
जागर्तीत्यभिमन्वते जडजनाः क्षुद्रं हि तेषां सुखम् ।
श्रीरङ्गेशगुरूत्तमस्य यमिनः श्रीसूक्तिरत्नाकरे
गाहंगाहमशेषभोगफलितान् हर्षान् भजामो वयम् ॥ १९ ॥

வல்லிசேர் நுண்ணிடை மாதர்களோடு அணைவதனால் இன்பமுள்ளதென்று நீசர்கள் நினைக்கிறார்கள். அவர்களுக்கு இன்பமிருக்கலாம்; ஆனால் அது மிகவும் அற்பமானது; ஸ்ரீரங்கநாதனுக்கு ஆசார்யராக அமைந்த மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி ஸாகரத்தில் ஆழ்ந்து அமிழ்ந்து உலகிலுள்ள ஸகலவித போகங்களாலும் விளையக்கூடிய ஸகலவிதமான இன்பங்களையும் நுகர்வோம் யாம். (௧௯)

अन्यान्येष्वमितेषु लौकिकतया ख्यातेषु कार्योत्करे-
ष्वासक्त्या विगलत्यहो बहुतमः कालो वृथा देहिनाम् ।

स्वामिन् सुन्दरयोगिवर्य ! भवतः पादाब्जयोः प्रार्थये
भावत्कोक्तिनिषेवणैकरसिकः कालं नयेयं निजम् ॥ ४० ॥

உலகில் ஒவ்வொருவர்க்கும் லௌகிகமான பலபல காரியங்களிருப்பதால் அவற்றில் போது போக்க நேர்ந்து அதிககாலம் வீணாகவே கழிந்து போகிறது; மணவாள மாமுனிகளே! அடியேனுக்கு அப்படியல்லாமல் தேவரீருடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளிலேயே ஸகல காலமும் செல்லும்படி அருள் புரிய வேணுமென்று திருவடி வாரத்தில் வேண்டிக்கொள்கிறேன். (௪௦)

मञ्जीराञ्चितपादयुग्मवनितासंचारकालोदित-
ध्वन्याकर्णनविह्वलाः कतिपये मुह्यन्ति, मुह्यन्तु ते ।
व्यामोहो मम तु प्रसिद्ध्यतितमां श्रीरम्ययोगीशितुः
मन्त्रोद्घोषणकालिकध्वनिविशेषाकर्णनोज्जृम्भितः ॥ ४१ ॥

மாதர்கள் பாதச்சிலம்பு அணிந்துகொண்டு நடந்து செல்லுமளவில் அச்சிலம்பொலி கேட்டு மயங்கிப்போவாருமுளர்; அதுகிடக்க: மணவாளமாமுனிகளின் தனியனை கோஷ்டிகளில் உரக்க அநுஸந்திக்கும்போது உண்டாகும் த்வநி விசேஷத்தைக் கேட்குமளவிலே அடியேன் வ்யாமோஹித்திருக்குமது ஸுப்ரஸித்தம்.

தனியனின் பூர்வார்த்தம் முற்றிற்று.

———

உத்தரார்த்தம்.

यस्य स्यादिह मानसे सुकृतिनः पुंसस्सदा पावनं
श्रीमत्कान्तवरोपयन्तृयमिराण्मूर्तेश्शुभं चिन्तनम् ।
तस्य स्यादनघा मतिर्यतिपतेस्सद्दर्शने निस्तुला
किं भूयःकथनेन ? तत्त्वमखिलं ज्ञातुं स एवार्हति ॥ ४२ ॥

மணவாளமாமுனிகளின் பரமபவித்திரமான திருக்கோலத்தைச் சிந்தை செய்யும் பாக்கியமுடையார்க்கு எம்பெருமானார் தரிசனத்தில் நல்ல உணர்ச்சி விளையும். ஸகல தத்துவங்களையும் உள்ளபடி யுணரவல்ல யோக்யதை அவர்கட்கே உரியதாகும். (சஉ)

(अथ वा श्लोकान्तरम् ।)

यद्यप्यत्र शठारिनाथमुनिराट्श्रीयामुनश्रीयति-
क्ष्माभृद्भट्टपराशरादिगुरवोऽप्यत्यन्तभक्त्यास्पदम् ।
जाग्रत्येव, तथाऽपि मे विशदवाक्चूडामणौ सुन्दरे
योगीन्द्रे तु विलक्षणा नवनवा भक्तिस्समुज्जृम्भते ॥ ४३ ॥

இவ்வுலகில் நம்மாழ்வார் நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் பட்டர் முதலான ஆசாரியர்களும் நம்முடைய பக்திக்குப் பாத்திரமாகக் கூடியவர்களாக விளங்குகின்றார்களெனினும், அடியேனுக்கு விசதவாக் சிகாமணியான மணவாள மாமுனிகளிடத்தில் மாத்திரமே விலக்ஷணமாய் நவம் நவமான பக்தி ஒளிர்கின்றது. (சங)

अध्वानं वरयोगिना सुमनसा संदर्शितं भेजुषां
तत्त्वार्थेषु विशुद्धधीविलसितं विद्योतते विश्रुतम् ।
तस्मिन्नध्वनि पावने विमुखतां ये बिभ्रति क्षुल्लकाः
तेषां शोच्यदशां कथं नु कथये धिग्जन्म तेषामिह ॥ ४४ ॥

மணவாளமாமுனிகள் காட்டியருளின பத்ததியைப் பற்றினவர்களுக்குத் தத்வார்த்தங்களில் தூய நன்மதி விளங்குவது ப்ரஸித்தம்; தௌர்ப்பாக்ய வசத்தாலே அந்த நல்வழியில் விமுகராயிருக்குமவர்கள் படும் பாட்டை என் சொல்வேன்? அன்னவர்களின் பிறவியே வெறுக்கத்தக்கது. (சச)

तन्यान्निस्तुलवैभवो वरमुनिः प्रेमात्मिकां शेमुषीम्
आत्मीयानघदिव्यसूक्तिविमुखेष्वप्यञ्जसेत्यर्थये ।
नैवं चेदहह ! प्रकाममुदियात् श्रीवैष्णवानां सतां
तेषां दुर्गतिसंततिः, कथमिदं सह्यं भवेन्मादृशाम् ॥ ४५ ॥

மணவாளமாமுனிகள் தம்முடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளில் விமுகராயிருப்பார்கட்கும் அன்பு உண்டாகும்படி கடாக்ஷித்தருளவேணுமென்று அடியேன் வேண்டிக்கொள்ளுகிறேன். ஏனெனில், ஸ்ரீவைஷ்ணவர்களாகப் பிறந்து மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளில் மாச்சரியங் கொண்டிருந்தால் அவர்களுக்கு இடையறாத துர்க்கதிகளன்றோ நேரும். ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு துர்க்கதி

நேருமதென்றால் இந்த துக்கம் ஸஹிக்கக் கூடியதன்றே. ஆகவே, தீயவர்களையும் நல்லவர்களாக்கியருள்க. (சரு)

ईषद्भक्तिरलंतरां वरमुनेः श्रीपादपङ्केरुहे
तावत्या परमार्थतत्त्वमखिलं निस्संशयं भास्यति ।
एवं द्वेषलवोऽप्यलं निपतनायोच्चावचे नारके
हाहा! तत्त्वमिदं विदन्नपि जनो भूयान् विनाशोन्मुखः ॥

மணவாளமாமுனிகளின் திருவடிகளில் ஸ்வல்ப பக்தி யிருந்தாலும், பரமார்த்தங்களை உள்ளபடி உணர்வதற்கு அவ்வளவே போதுமானது. இங்ஙனமே மாமுனிகள் திறத்தில் சிறிது மாச்சரியமுண்டானாலும் பல கொடிய நரகங்களில் விழுந்துழல்வதற்கு அவ்வளவே போதும். அந்தோ! இவ்வுண்மையை அறிந்து வைத்தும் நசித்துப்போக நினைப்பார் பலருளரே! (சசு)

नत्वा श्रीवरयोगिपादकमलं मूर्धाऽश्नुते धन्यतां
स्तुत्वा तस्य मुनेर्गुणान् शुभतमान् जिह्वा कृतार्था परम् ।
स्मृत्वा तस्य वचांसि पावनतमं बोभोति मे मानसं
पाणिस्तस्य यशो विलिख्य विपुलं कार्तार्थ्यमासेवते ॥४७॥

அடியேனுடைய தலை மணவாளமாமுனிகளின் திருவடிகளைத் தொழுது தன்யமாகின்றது. வாக்கு அவருடைய திருக்குணங்களைத் துதித்து க்ருதார்த்தமாகின்றது. உள்ளம் அவருடைய ஸ்ரீஸூக்திகளைச் சிந்தை

செய்து பவித்திரமாகின்றது. கை அவருடைய பரந்த புகழை யெழுதி ஸத்தை பெறுகின்றது. (சஎ)

दत्ते रम्यवरोपयन्तृयमिनः श्रीसूक्तिरत्नाकरः
भक्तानां श्रियमुत्तमां गुणमणीन् स्वादूपदेशोर्मिकाः ।
नित्यं शुद्धयशोमयं शशधरं ज्ञानाख्यकल्पद्रुमं
त्रय्यन्तार्थमयीं सुधां परमतध्वंसोक्तिहालाहलम् ॥ ४८ ॥

மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி உண்மையில் கடலென்னத்தகும். கடல் செய்வதெல்லாம் செய்கின்றது இதுவும். கடல் ஸ்ரீயைத் தந்தது. இந்தக்கடல் பக்தர்களுக்குச் சிறந்த செல்வத்தைத் தந்திடுகின்றது. கடல் ரத்னங்களைத் தருகின்றது; இக்கடல் ஸத்குணங்களாகிற ரத்னங்களைத் தருகின்றது. (மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளைப் பயில்பவர்கட்கு நற்குணங்கள் விளையுமென்கை.) கடல் அலைகளைத் தரும். இக்கடல் மதுரோபதேச தரங்கங்களைத் தரும். கடல் சந்திரனைத் தந்தது; இக்கடல் நல்ல கீர்த்தியாகிற சந்திரனைத் தருகின்றது. (மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளைப் பயில்பவர்கட்கு நல்ல புகழுண்டாமென்கை.) அக்கடல் கல்ப வ்ருக்ஷத்தைப் பயந்தது. இக்கடல் ஞானமாகிற கற்பகத்தருவைத் தரும். அக்கடல் அமுதமளித்தது. இக்கடல் வேதாந்த விழுப்பொருளாகிற அமுதமளிக்கவல்லது. அக்கடல் ஹாலாஹல மென்னும் நஞ்சை நல்கிற்று; இக்கடல் (தத்வத்ரய வ்யாக்யாநாதிகளில்) பரமதத்வம்ஸந ஸ்ரீஸூக்தியாகிற ஹாலாஹலத்தைத் தரும். ஆகவே கடலென்னப் பொருந்தும். (பரமதத்வம்ஸந ஸ்ரீஸூக்தி

களும் தொண்டர்க்கு அமுதமேயானாலும் பிறருடைய த்ருஷ்டியாலே ஹாலாஹலமென்றபடி.) (சஅ)

रक्षायां निपुणो रमापतिरिति ख्यातिर्वृथैवोदिता
सत्यं रक्षति संततं वरमुनिः कान्तोपयन्तैव नः ।
इष्टप्राप्तिमनिष्टभङ्गमपि यत्सूक्त्या वयं प्राप्नुमः
श्रीमानेष मुनीश्वरो हि भविनामैकान्त्यतो रक्षकः ॥ ४९ ॥

ரக்ஷிக்க வல்லவன் லக்ஷ்மீபதி என்றொரு ப்ரஸித்தி வீணாகவே உலகிற் பரவியது. உண்மையில் மணவாள மாமுனிகளே நம்மை ரக்ஷிப்பவராவர். இஷ்டப்ராப்தியையும் அநிஷ்ட நிவாரணத்தையும் செய்பவரே ரக்ஷகராதலால் மாமுனிகள் தாமே தமது ஸ்ரீஸூக்திகளால் அவ்விரண்டையும் செய்துகொண்டு ஸம்ஸாரிகளை நன்கு ரக்ஷித்தருளா நின்றார். (சகூ.)

अन्धानां रविरश्मिभिर्न फलमित्येतावता भास्करे
को दोषो लभतेऽवकाशम् अहह ! न्यायोऽयमत्राक्षतः ।
दौर्भाग्याद्धतचेतसां वरमुनेः श्रीसूक्तिभिः किंचिद-
प्यासीन्नो फलमित्यतः किमु हतं ? धन्यान् सतः पश्यत ॥

குருடர்களுக்கு ஸூர்ய கிரணங்களால் ஒரு பலனுமில்லை யென்பதால் ஸூர்யனுக்கு ஏதேனும் குற்றமுண்டோ? அதுபோல கருவிலே திருவிலாதார் சிலர் மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளால் பயன் பெற்

றிலரென்றால் அதனால் என்ன சேதம்? பயன் பெற்று வாழ்கிற புனிதர்களைக் கண்டு தெளிக. (௫0)

पर्जन्यो जलराशितः कटु जलं पीत्वा यथा वर्षति
स्वादिष्ठं ननु तद्वदेव भगवान् सौम्योपयन्ता मुनिः ।
शास्त्राब्धेरमितान् प्रगृह्य विषयान् सौरादवेन स्वयं
वर्षन् साधु निपाययत्यनवधीन् सौभाग्यसीम्नि स्थितान् ॥

மேகமானது கடல் நீரைப்பருகிப் பரமமதுரமாக வர்ஷிப்பதுபோல மணவாள மாமுனிகளும் சாஸ்த்ரக் கடலில் நின்றும் அளவற்ற விஷயங்களை முகந்துகொண்டு அதிமதுரமாக வர்ஷித்து பாக்யசாலிகள் பலரும் பருகிக் களிக்குமாறு செய்தருளா நின்றார். (௫௧)

रक्षापेक्षणमात्रकांक्षिणि हरौ नस्साधनानुष्ठितिः
नौचित्यं वहतीति लोकगुरुराट्सूक्तिं समुल्लासयन् ।
श्रीमत्कान्तवरोपयन्तृयमिनः श्रीसूक्तिरत्नोत्करः
श्रीरामानुजसंप्रदायसरणेरुच्चैः प्रदीपायते ॥ ५२ ॥

*सर्वज्ञोऽपि हि विश्वेशस्सदा कारुणिकोऽपि सन् । संसारतन्त्रवाहित्वाद्रक्ष्यापेक्षां प्रतीक्षते * என்கிறபடியே ரக்ஷாபேக்ஷா மாத்திரத்தையே எம்பெருமான் எதிர் பார்க்கிறானாதலால் நாம் பாக்க வொரு ஸாதநாநுஷ்டானம் பண்ணலாகாதென்று பிள்ளை லோகாசாரியர் அருளிச் செய்ததை நன்கு விளக்குகின்ற மணவாள மாமுனிகளின்

ஸ்ரீஸூக்திரத்னம் எம்பெருமானார் தரிசனத்திற்கு உயர்ந்த மணிவிளக்காகவுள்ளது. (ருஉ)

अन्तर्ध्वान्तमपासितुं क्षितितले ज्ञानप्रदीपादृते
नान्यत्किञ्चन साधनं लसति, तं दीपं वरो योगिराट् ।
एकाकी स्वयमप्रमेयकृपया प्रादात्तथाऽप्यञ्जसा
तस्मिन् हा ! शलभीभवन्ति चपलाः किं ब्रूमहे तद्गतिम् ॥

அகவிருளை யகற்றுவதற்கு உலகில் ஞானவிளக்கு தவிர வேறொரு கருவி கிடையாதென்பது நிர்விவாதம். அப்படிப்பட்ட அணிவிளக்கை இன்னருளால் ஏற்றி வைத்தவர் மணவாள மாமுனிகள் ஒருவரேயாவர்; ஆயினும் அந்தோ! அவ்விளக்கில் சலபமாகி யொழிவாரும் சிலருளரே! அன்னவர்கட்கு நேரப்போகும் துர்க்கதியை என் சொல்வோம்! (ருக)

वन्दे सुन्दरयोगिवर्यचरणद्वन्द्वं समस्तार्थदं
ये केचिद्बहुलान्निबन्धनिवहान् क्षुद्रभ्रमोत्पादकान् ।
निर्माय प्रतिवञ्चयन्ति भुवनं तेषां वचोराशिभिः
दासस्यास्य मनः कदाऽपि विकृतिं मा नाम विन्दत्विति ॥

க்ஷுத்ர ஜனங்களுக்கு வியாமோஹத்தை விளைக்க வல்ல பலபல சுவடிகளை யெழுதி வைத்து உலகை வஞ்சிப்பார் பலருளர்; அன்னவர்களுடைய உக்திராசிகளால் அடியேனுடைய மனம் ஒருபோதும் விகாரமடையா

திருக்க வேணுமென்று மணவாள மாமுனிகளின் திருவடியிணையை இறைஞ்சுகின்றேன். (ருச.)

अब्धिर्लङ्घित एव वानरभटैरित्युक्तरीत्या भुवि
प्रायस्सन्ति महाबुधा अपि न ते सारं तु सारस्वतम् ।
जानन्ति, प्रकटं ब्रवीमि सकलं शास्त्रार्थसारं विदन्
एकाकी जयति क्षितौ वरवरो योगीश्वरो नेतरः ॥ ५५ ॥

*அப்திர் லங்கித ஏவ வாநர படை: * என்று முராரி கவி பணித்தபடியே கடலைக்கடந்த வானர முதலிகளுக்குக் கடலின் ஆழம் தெரியாதாப் போலே, உலகில் பண்டிதரென்று பேர்படைத்தவர்களெல்லாரும் மேலெழுந்தவாரியாக அறிந்தவர்களே யன்றி சாஸ்த்ரார்த்த ஸாரங்களை உட்புகுந்து அறிந்தாரிலர்; மணவாள மாமுனிகளொருவரே ஆழ்ந்த அறிவாளரென்று திண்ணமாகச் சொல்லுவேன். (ருரு)

णक्ष-स्तृक्ष-गतौ शश-प्लुतगतौ शूष-प्रसूतौ श्विता-
वर्णे पक्षपरिग्रहे पडि-गतावित्यादिधातून् सदा ।
जल्पंजल्पमशेषमायुरहह व्यर्थं क्षिपन्तो जडाः
श्रीसूक्तीर्न विदन्ति कान्तयमिनो वैकुण्ठवैदेशिकाः ॥ ५६ ॥

"ணக்ஷஸ்த்ருக்ஷ—கதௌ" "சச—ப்லுஷகதௌ" என்றிப்படி தாது பாடங்களை நெட்டுருப் போட்டுக் கொண்டே வாணாளை யெல்லாம் வீணாளாகக் கழிக்கின்ற ஜடர்கள் அந்தோ! மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்

திகளை அறியப் பெற்றிலரே! நல்ல கதிக்கு வழி தேடு கின்றிலரே.

(ருசா)

अन्तस्सर्वपदार्थसन्ततिषु च व्याप्तस्य विष्णोर्हरेः
पूर्तिर्नाम समाप्यवृत्तिरिति नेत्यन्याय्यवादोत्सुकान् ।
लक्ष्मीनाथविचित्रशक्त्यसहनान् स्वोक्त्या विधून्वन्मुनिः
श्रीमत्कान्तवरोपयन्तृगुरुराडेकस्सतामग्रणीः ॥ ५७ ॥

ஸகல பதார்த்தங்களிலும் உள்ளும் புறமுமொக்க வியாபித்திருக்கின்ற எம்பெருமானுடைய வ்யாப்தியா வது வஸ்துதோறும் பரிஸமாப்ய வர்த்தமாநத்வமன்று என்று வாதிப்பவர்களும் பகவானுடைய விசித்திர சக் தியை ஸஹியாதவர்களுமான பிறரைத் தமது ஸ்ரீஸூக் தியால் உதறித் தள்ளுகின்ற மணவாள மாமுனிகளே ஸத்துக்களில் தலைவர்.

(ருஎ)

मन्यन्ते वरयोगिनं यतिपतेरेवावतारं परं
व्याख्यारूपकृतीर्विशेषत इह प्रायच्छतां द्वावपि ।
व्यर्थां दूषणहास्यवाचमपि नो विन्यस्यतः सर्वथा
द्वावेतावविभिन्नशीलसुभगावित्येव निश्चप्रचम् ॥ ५८ ॥

மணவாள மாமுனிகள் உடையவருடைய அபராவ தாரமேயாவர். பெரும்பாலும் வியாக்யான ரூபங்களான க்ரந்தங்களையே அருளிச் செய்வதும், வீண் தூஷண பரிஹாஸ வாக்குக்களைப் பொழியாமலிருப்பதுமான தன்மைகள் இவ்விரண்டு ஆசார்யர்கள்பக்கலிலுமே நன்கு

பொருந்தி யிருத்தல்கொண்டு இதை நிச்சயிக்கலாம்.

वर्धिष्णून् प्रति बोधयेयमधुना चित्तभ्रमोत्पादने-
ऽन्यान्येषु निबन्धराशिषु वृथा कालक्षयो नोचितः ।
द्राक्षापाकनिदर्शनानि ललितान्याश्चर्यवाग्गुम्भना-
न्याचार्यस्य वरोपयन्तृयमिनः सेवध्वमेकान्ततः ॥ ५९ ॥

மேன்மேலும் ஞானவிளக்கம் பெறவேணுமென்றிருப்பார்க்கு ஒன்று சொல்லுகேன். சித்தப்ரமத்தை விளைக்கவல்ல பல்வேறு புத்தகங்களில் வீணாகப் போதைப் போக்குவது தகுதியற்றது; த்ராக்ஷாபாகத்திற்கு நிதர்சநமாக அமைந்த மணவாள மாமுனிகளின் அத்புத லலித திவ்ய ஸூக்திகளையே இடைவீடின்றி அநுபவியுங்கள். (ருகூ)

अन्तस्सन्ततमेक एव भगवान् कान्तोपयन्ता मुनिः
कान्तं मङ्गलविग्रहं विशदयन् प्रीणाति मे मानसम् ।
नैवान्यस्य गुरोर्हरेरपि च वाऽत्रास्तेऽवकाशो ध्रुवं
धन्योऽहं न समोऽस्ति मे न च समो नान्यस्समो भूतले ॥

என்னுள்ளத்துள்ளே மணவாள மாமுனிகளொருவர் தாமே தமது திருமேனியொளியை விளங்கச் செய்தருளா நின்றுள்ளார்; வேறோராசிரியர்க்காவது எம்பெருமானுக்காவது இனி என்னெஞ்சில் இடம் கிடைப்பரிது; இல்லையெனக்கெதிரில்லை யெனக்கெதிரில்லை யெனக்கெதிரே. (கூ0)

नक्षत्रेशसमानमाननमथ ज्योत्स्नासदृक्षं स्मितं
कर्णान्तोल्लसिते दृशौ वकुलभृत्सूक्त्युज्ज्वलं चाधरम् ।
चेतोहारिविशुद्धपुण्ड्रसुभगं गात्रं च योगीन्द्र! ते
ये प्रैक्षन्त समक्षतो ध्रुवममी धन्यास्सुधन्या नराः ॥ ६१ ॥

மணவாள மாமுனிகாள்! தேவரீருடைய திங்கள் போன்ற திருமுக மண்டலத்தையும் நிலாப்போன்ற புன்முறுவலையும் செவியளவும் நீண்ட திருக்கண்களையும் திருவாய் மொழியின் மணம் கமழும் திருவதரத்தையும் திவ்யோர்த்வ புண்ட்ர ஸுபகமான திருமேனியையும் நேரில் ஸேவிக்கப் பெற்றவர்களே பாக்யசாலிகள். (சுக)

दत्ते निश्चलभक्तिमात्मपदयोर्धत्ते विरक्तिं मुनिः
चित्ते सन्ततसन्निधानकरणाद्वित्तेषणां लुम्पति ।
वित्तेशादिपदान्यवाप्तुमपि भो हृत्ते रुचिर्मास्म भूत्
धिक्ते दुर्विषयेषु धावनरुचिं मत्तेभवन्माचर ॥ ६२ ॥

மணவாள மாமுனிகள் என்னுள்ளத்துள் எப்போதுமெழுந்தருளியிருந்து தமது திருவடிகளில் ஸ்திரமான பக்தியை யளிக்கின்றார்; விரக்தியை விளைக்கின்றார்; பொருளாசையைப் போக்குகின்றார்; ஓ மனமே! குபேராதி பதவிகளைப் பெறுதற்கும் நீ ஆசைகொள்ளாதே; விஷயாந்தரங்களில் ஓட நினைப்பதும் வேண்டா; மதயானைபோல் கண்டவிடமும் திரியாதே; மாமுனிகளிடத்தே ஊன்றியிரு. (சுஉ)

एरण्डोऽपि भुवि द्रुमायत इति न्यायेन यः कश्चिद-
प्यार्यो विन्दति तत्रतत्र सहसैवाचार्यपीठाञ्चनम् ।
आचार्यत्वमिहैव शक्तिमनघां प्राप्नोति निस्संशयं
श्रीमत्सुन्दरयोगिनीत्यहिघटे हस्तं प्रसार्य ब्रुवे ॥ ६३ ॥

* நிரஸ்தபாதபே தேசே ஏரண்டோபி த்ருமாயதே * [மரமில்லாதவூரில் ஆமணக்கஞ் செடியும் மரமாம்] என்றாப்போலே ஆங்காங்குப் பலரும் ஆசார்ய பீடத்தில் அமர்ந்து ஆசார்ய விருது வஹித்து விடலாம்; உண்மையில் மணவாள மாமுனிகளொருவர் பக்கலிலேயே ஆசார்யத்வ பூர்த்தியுள்ளதென்று குடப்பாம்பில் கையிட்டுரைப்பேன். (௬௩)

रक्षिष्यत्यवलीलया हरिरिति भ्रान्तास्तमेव स्तुव-
न्त्याचार्यान्वयमन्तरा स भगवान् नो रक्षितुं शक्नुयात् ।
आचार्यत्वमिहैव सुन्दरमुनौ पूर्णं ततोऽस्यान्वयं
दृष्ट्वैवाच्युत एष रक्षितुमलं तस्मान्मुनीन्द्रो गतिः ॥ ६४ ॥

உலகில் பலரும் எம்பெருமானையே ரக்ஷகனாக மயங்கி அவனையே துதிக்கின்றனர். அந்த பகவான் தானும் ஆசார்ய ஸம்பந்தமில்லாதாரைக் கடாக்ஷிக்க வல்லவனல்லன்; மணவாள மாமுனிகளிடத்திலேயே ஆசார்யத்வம் புஷ்கலமாதலால் இவருடைய ஸம்பந்தத்தை நோக்கியே அவன் ரக்ஷிக்கவல்லவன்; ஆதலால் மாமுனிகளே முமுக்ஷுக்களுக்குத் தஞ்சம். (௬௪)

अध्वानध्वविबोधशून्यमनसामुद्धारणैकेच्छया
लोकाचार्यकृताः कृतीरतिनिगूढार्था मुनीन्द्रो वरः ।
व्याख्यास्यद्यदि नैव दिव्यकृपया कृत्स्नं जगद्दुस्तरे
संसारे ह्यपतिष्यदस्य हि गुरोर्वाचामभूमिः कृपा ॥ ६५ ॥

நல்வழி தீவழி தெரியாது திகைக்கின்றவர்களுக்குக் கைகொடுக்கவே பிள்ளை யுலகாசிரியர் அருளிச்செய்த ரஹஸ்யார்த்த க்ரந்தங்களை மணவாள மாமுனிகள் பரம கிருபையோடு வியாக்யானித் தருளாதிருந்தால், அந்தோ! உலகம் முழுவதும் ஸம்ஸார ஸாகரத்தில் அழுந்தித் துவளுமே; மாமுனிகளின் பேரருள் பேச்சுக்கு நிலமோ?

(௬௫)

मग्नानां भवसागरे तरणिवद्विभ्राजते यत्पदं
दष्टानां विषयाहिभिर्विहगराण्मन्त्रायते यस्य गीः ।
दग्धानां दुरितौघदावदहनैः धाराधरौघायते
यन्मूर्तिच्छविचिन्तनं स जयतात् कान्तोपयन्ता मुनिः ॥६६॥

மணவாள மாமுனிகளின் திருவடிகள் பிறவிக்கடலுள் அழுந்தினார்க்கு நாவாய் போலும்; அவருடைய திருவாக்குக்கள் விஷய விஷதரங்களாலே கடியுண்டார்க்கு கருட மந்த்ரம் போலும்; அவருடைய திருமேனி விளக்கத்தைச் சிந்தை செய்வது பாவங்களாகிற காட்டுத் தீயில் வேகின்றவர்களுக்கு வர்ஷதாரை போலும், அன்னவர் வாழ்க.

(௬௬)

यत्नोऽत्रस्यविधेय एव मनुजैश्चैतन्यकार्यात्मकः
नो चेन्मुक्तिकथैव नेति वदतां स्वान्तस्थितध्वान्तहृत् ।
यस्य श्रीवरयोगिनः सुमहिता सूक्तिः प्रपन्नौषधं
सोऽयं मामिह वीक्षते स कृपया स्यादेष इत्यादरात् ॥६७॥

'சைதந்ய கார்யமான ஸாதநாநுஷ்டானங்களை அவசியம் பண்ணியே தீரவேண்டும்; இல்லையாகில் முக்திபெற வழியில்லை' என்பாருடைய அகவிருளைப் போக்குமதாய் ப்ரபந்நர்களுக்கு அருமருந்தான ஸ்ரீஸூக்திகளைப் பணித்தருளின மணவாள மாமுனிகள் அடியேனை * ஆமுதல்வனிவனென்று கடாக்ஷித்தருளினர்.

अह्वायाश्रयत प्रहर्षविवशाः कान्तोपयन्तुर्मुनेः
पादाब्जे अथ तस्य दिव्यफणितिष्वार्तिप्रबन्धं सदा ।
उच्चैर्घुष्यत सर्वमार्तिनिवहं सद्यो हतं पश्यत
श्रेयांसि स्वयमागतानि नियतं संप्राप्य संतुष्यत ॥६८॥

மணவாள மாமுனிகளின் திருவடித் தாமரைகளை உகந்து விரைந்து பணிமின்: பின்னை அவருடைய திவ்ய ஸூக்திகளுள் ஆர்த்திப் பிரபந்தத்தை உரக்க அநுஸந்தித்து எல்லா ஆர்த்திகளையும் உடனே தொலையப் பெறுங்கள்; ஸகல ச்ரேயஸ்ஸுகளும் தன்னடையே வந்து சேரும்படி கண்டு மகிழுங்கள். (௬அ)

जन्मान्यत्र महीतले मम मुहुर्भूयासुरित्यर्थये
यद्येवं वरयोगिसूक्तिरसिकः स्यां सर्वजन्मस्वपि ।
ख्याते नित्यविभूतिनाम्नि निलये वासस्पृहा नास्ति मे
सत्यं वच्मि मुनीन्द्र सुन्दरगुरो पूर्णं कटाक्षं कुरु ॥ ६९ ॥

அடியேன் இப்போது போலவே எப்போதும் மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளையே சுவைத்திருப்பேனாயின் அடியேன் மீண்டு மீண்டும் இவ்வுலகிலே பிறக்கப் பெறுவேனாக; பிறவிதோறும் இப் பெரும் பாக்கியம் வாய்க்குமாகில் பரமபதத்திலும் வாஞ்சையுடையேனல்லேன்; மாமுனிகளே! இதுவே உண்மையுரை: பூர்ணமாகக் கடாக்ஷித்தருளவேணும். (சுகூ)

आचारानभिरामयोगिमणिना संरक्षितान् पावनान्
धन्याः श्रद्दधते तदन्यजनतास्सीदन्त्वनर्थ्ये पथि ।
शुद्धायामिह संप्रदायसरणौ सौभाग्यभूम्ना जनिः
संपन्नेति सदा ममैव हृदयं हर्षप्रकर्षोज्ज्वलम् ॥ ७० ॥

மணவாள மாமுனிகள் காத்தருளின ஸதநுஷ்டானங்களில் பாக்யசாலிகள் ஊன்றிப் போருவர்கள்: அங்ஙனல்லாத மற்றையோர் தீயவழிகளில் அலமந்து துவள்க. பரமபவித்திரமான இந்த ஸத்ஸம்பிரதாய ஸரணியில் பரம பாக்யவசத்தினால் பிறக்கப் பெற்றோமே யென்கிற களிப்பு அடியேனுக்கே உள்ளதொன்று. (எ0)

मन्त्रास्सन्ति हि भूरिशो भगवतः किं तेष्वभूद्गौरवं
कस्तान् चिन्तयतीह कस्य हृदयं श्रद्धाजडं तेष्वहो ।
श्रीरङ्गेन्दुमुखारविन्दमधुनः श्रीशैलमन्त्रोत्तम-
स्योत्कर्षो हि विसृत्वरो विजयते योगीन्द्र भोस्सुन्दर ! ॥

மணவாள மாமுனிகளே! உலகில் பலபல பகவந் மந்த்ரங்கள் உள்ளன; அவற்றிற்கு என்ன பெருமை ஏற்பட்டது? அவற்றைச் சிந்திப்பாரார்? அவற்றில் யாருடைய உள்ளம் ஊன்றியிருக்கிறது? ஸ்ரீரங்கநாதனுடைய முகாரவிந்தத்தில் தோன்றின மதுவென்னலான (தேவரீர் விஷயமான) ஸ்ரீசைலேச மந்திரத்தின் பெருமையேயன்றோ உலக முழுவது மோங்கி நிற்கின்றது. (எக)

आचार्यप्रवरे वरे मुनिवरे यद्यप्यनन्याश्रयाः
सर्वास्संपद उल्लसन्ति च तथाऽप्येका परं न्यूनता ।
श्रीशैलेशदयेति विश्वविदितं सर्वोत्तमं पावनं
मन्त्रं चिन्तयितुं यदेष मुनिराड् भाग्यं न लेभे भुवि ॥७२॥

மணவாள மாமுனிகளிடத்தில் எல்லாப் பெருமைகளும் விளங்க நின்றாலும் ஒரு குறை மாத்திரம் உள்ளதேயாம்; அது என்னெனில்; மிகச்சிறந்து பரம பாவனமாய் விளங்கும் ஸ்ரீசைலேச மந்திரத்தைச் சிந்தை செய்யும் பாக்கியம் அவர்க்கு இல்லையாயிற்றே. (எஉ)

तत्त्वं किंचन वच्मि सुन्दरमुने दिव्योत्सवस्तावकः
श्रीकाञ्चीप्रभृतिस्थलेषु भगवन् संपद्यते भूरिशः ।
तत्तादृक्समयेषु यादृशमहं हर्षं समासादये
सोऽयं नैव किलान्वभावि भवता त्वत्तोऽपि धन्योऽस्म्यहम् ॥

மணவாள மாமுனிகளே! ஒரு உண்மை கேளீர்: தேவரீருடைய மஹோத்ஸவம் கச்சிநகர் முதலான பல தலங்களில் பெருக்க நடக்கிறதன்றோ. அந்த ஸமயங்களில் அடியேன் அநுபவிக்கும் ஆநந்தாதிசயத்தை தேவரீர் விபவத்தில் அநுபவிக்கப் பெற்றிலீரன்றோ. [அப்போது மணவாளமாமுனிகளுத்ஸவமென்று நடைபெறவும் அவ்வானந்தத்தை அநுபவிக்கவும் ப்ராப்தமாகவில்லையே.] ஆதலால் இவ்வகையால் தேவரீரைவிட அடியேனே பாக்யசாலியாவேன். (௬௩)

अन्येषामपि यद्यपीह बहुधा संपद्यते ह्युत्सवः
श्रीमद्रम्यमुनेर्महोत्सवसमारोहः किलान्यादृशः ।
भास्वान्यावदुपैतुमिच्छति तुलाराशिं तदानीं प्रभृ-
त्यस्माकं हृदि निस्तुलः खलु चलत्युत्साहनित्योत्सवः ॥६४॥

திவ்ய தேசங்களில் மற்றும் பல ஆசிரியர்களுக்கும் உத்ஸவம் நடைபெற்றாலும் மணவாள மாமுனிகளுத்ஸவத்தின் வீறு விலக்ஷணமானதே. ஐப்பசி மாதம் அவதரிக்கப் போகிறதென்னும் போதே பிடித்து எமது நெஞ்

சில் நடைபெறும் உத்ஸாஹ மஹோத்ஸவத்தை என் சொல்வோம். (எச)

रंगाधीश्वर एक एव भगवानर्चासु धन्यो मुने
यस्ते शिष्य इति प्रसिद्धिमनघामद्यापि संरक्षति ।
कुम्भे मासि वलक्षपक्षलसिते द्वादश्यभिख्ये तिथौ
यस्मादध्ययनोत्सवं च भवतो निर्वर्तयन् मोदते ॥७५॥

மணவாள மாமுனிகளே! அர்ச்சா மூர்த்திகளில் ஸ்ரீரங்கநாதனொருவனே பாக்யசாலி. அப்பெருமானே யன்றோ தேவரீருக்கு சிஷ்யனாக அமைந்த பெருமையை நாளைக்கும் காப்பாற்றி வருகிறான். ஒரு ஆசிரியர்க்கும் நடைபெறாத திருவத்யயனத் திருநாளை மாசிமாஸ சுக்ல பக்ஷ த்வாதசியன்று தேவரீருக்கு அப்பெருமான் நடத்திப்போருவது சிஷ்யக்ருத்யம் அவர்ஜநீயம் என்றன்றோ? (எரு)

अद्याहं वरयोगिवर्य भवतः स्तोत्रे प्रवृत्तो मुदा
चिन्तालेशविनाकृतस्सरभसं पद्यानि विज्ञापये ।
स्तोत्रं हन्त समाप्तिमेष्यति भवन्माहात्म्यदुग्धोदधौ
द्वित्रा एव हि शीकराः परिचिताः पूर्त्या कथं वर्णये ॥७६॥

மணவாளமாமுனிகளே! இன்று அடியேன் தேவரீரைத் துதிக்கவிழிந்து, சிறிதும் ஆலோசனையின்றியே இங்ஙனே ச்லோகமாலிகையை விரைவாகவே விண்ணப்பம் செய்துவருகிறேன்; இந்த ஸ்தோத்திரமோ முடிவு

பெறப்போகின்றது. தேவரீருடைய பெருமைக்கடலிலோ சில திவலைகள் மாத்திரமே அநுபவிக்கப் பட்டன; முழுவதும் அநுபவிக்க எங்ஙனே முடியும்? (எசு)

मन्दप्रज्ञ इतीरितोऽप्यहमहो कान्तोपयन्तर्मुने !
विश्रान्ति लवलेशतोऽप्यकलयन् त्वद्वैभवोल्लासिनीः ।
पद्यानां ततीरजस्रममितास्सानन्दमुत्पादयन्
प्राज्ञाग्रेसर इत्युपाधिमलभे श्रीमत्कृपां किं ब्रुवे ॥ ७७ ॥

மணவாள மாமுனிகளே! அடியேன் மந்தமதியென்று பேர் பெற்றவனாயினும், தேவரீருடைய பெருமைகளை விளக்கும் ச்லோகங்களையே இடைவீடின்றித் தொடுத்துக் கொண்டிருக்கின்றேனாதலால் மஹாப்ராஜ்ஞனென்று விருது பெற்றேனானேன்; தேவரீருடைய திருவருளை என் சொல்வேன்? (எஎ)

मन्त्रं त्वद्विषयं समस्तभगवत्सद्मस्वनाप्तप्रथं
दृष्ट्वा केचन जाल्मका अथ परं पद्यं समुत्पाद्य च ।
भूयो भूय इह प्रकाममुपयन्त्युच्चैः पराभूतिमि-
त्येतत्सुष्ठु विजानतामपि बत त्वद्वैभवं दुर्ग्रहम् ॥ ७८ ॥

மணவாளமாமுனிகளே! தேவரீருடைய தனியனான ஸ்ரீசைலேசத் திருமந்த்ரம் ஸகல திவ்ய தேசங்களிலும் புகழ் பெற்று வருவதைக் கண்டு பொறாதார் சிலர் தாம்

வேறொரு பத்யத்தை ஸ்ருஷ்டித்து அடிக்கடி பிரபலமான பரிபவத்தைப் பெற்று வருகிறார்களென்பதை நன்கு அறிந்தேயிருக்குமவர்கட்கும் அந்தோ! தேவரீருடைய பெருமை தெரியவில்லையே. (௭௮)

उक्तिस्सत्यतमा तवैव विलसत्यन्यस्य कस्यापि ने-
त्यात्मीयानुभवावगाहि तदिदं पूर्वे महान्तोऽब्रुवन् ।
स्वामिन् सुन्दरयोगिवर्य भवतः श्रीसूक्तिरत्नाकरे
संमृष्टे सति सत्यमुक्तमिदमित्युद्घोषणा युज्यते ॥ ७९ ॥

மணவாளமாமுனிகளே! தேவரீருடைய திவ்யஸூக்திகளே பொய்யொன்றுமில்லாதவை என்கிற உண்மையை நன்கு அநுபவித்துத் தெரிந்து கொண்ட பூருவர்கள் *பொய்யிலாத மணவாளமாமுனி புந்தி வாழி* என்று வாழ்த்தினார்கள்; தேவரீருடைய ஸ்ரீஸூக்திகளை ஆராயுமளவில், அந்த வாழ்த்து ஸத்யமானதேயென்று பறைசாற்றத் தட்டில்லை. (௭௯)

नन्ताऽनन्तपदारविन्दयुगले श्रेयो भजेद्वा न वे-
त्येवं संशय एव काममुदियादित्यस्ति शास्त्रस्थितिः ।
नन्तॄणां वरयोगिपादकमले श्रेयांसि सर्वाण्यपि
प्रादुष्ष्युः विशयावकाशविधुरं निश्चप्रचं घुष्यते ॥ ८० ॥

*ஸித்திர் பவதி வா நேதி ஸம்சயோச்யுதஸேவிநாம்* என்று பகவானைப் பற்றினவர்களுக்குப் பேற்றில்

ஸந்தேஹமே யுள்ளதாக சாஸ்த்ரம் முறையிடுகின்றது; அங்ஙனன்றிக்கே, மணவாளமாமுனிகளின் திருவடிகளைப் பற்றினர்க்கு ஸகல ச்ரேயஸ்ஸுக்களும் மல்குமென்று ஐயமற அறுதியிடப் பட்ட விஷயம். (அ0)

इन्द्रस्संयमिनां वरो मुनिवरः कान्तोपयन्ता गुरुः
श्रीशैलेशगुरूत्तमांघ्रिशरणो भोगीश्वरांशो मुनिः ।
श्रीमद्रम्यवरोपयन्तृयमिराडित्यादिनामावलीं
नित्यं ध्यायति मानसं मम ततश्शुद्धिं परां विन्दति ॥८१॥

பெரிய ஜீயர், மணவாளமாமுனிகள், அழகிய மணவாள மாமுனிகள், திருவாய்மொழிப்பிள்ளை மாதகவால் வாழ்ந்தவர், திருவனந்தாழ்வான் திருவவதாரமானவர் என்றிங்ஙனே நாமாவளிகளை எனது நெஞ்சம் நிச்சலும் சிந்தை செய்து தூய்மை பெறுகின்றது. (அக)

(अथ वा श्लोकान्तरम् ।)

इन्धे कुत्र वरो मुनीन्द्र इति ये पृच्छन्ति तेभ्यो ब्रुवे
स्वानुध्यानपरान्तरङ्गकुहरे दिव्येषु देशेष्वथ ।
श्रीमद्द्राविडदिव्यवेदनिनदोत्थानस्थलीषूल्लसेत्
इत्याहुः, मम मानसे परमसौ तैस्साकमास्ते ध्रुवम् ॥८२॥

மணவாள மாமுனிகள் எங்கு எழுந்தருளியுள்ளாரென்று கேட்டால், தம்மைச் சிந்திப்பார் சிந்தையினுள்ளும், திவ்ய தேசங்களிலும், திருவாய்மொழியின் இன்

கிறேன்; மாமுனிகளைச் சிந்தை செய்யப் புகுந்தபின்பு, நம்மாழ்வார் எம்பெருமானார் நம்பிள்ளை முதலானார் திறத்திலும் அடியேன் பக்தி குறையப்பெற்றேன். ஆதலால் மாமுனிகளையே துதிப்பது அடியேனுக்கு நித்யகால க்ஷேபமாயிற்று. (அச)

(यद्वा श्लोकान्तरम् ।)

मन्दप्रज्ञजना अपि श्रममृते जानन्तु पद्यार्थमि-
त्युत्कण्ठावशतो मुनिर्वरवरः स्तोत्राणि भूयांस्यहो ।
द्राक्षापाकमनोहराणि सृजति प्रेम्णा मदीयान्मुखात्
आचार्यप्रवरस्य तस्य करुणा कस्य स्तुतेर्गोचरः ॥ ८५ ॥

இவை ஸம்ஸ்க்ருத ச்லோகங்களாயிருந்தாலும் இவற்றின் பொருளை ஸாதாரண வ்யுத்பந்நர்களும் எளிதாக அறிந்துகொள்ள வேணுமென்று நாரிகேளபாக மன்றிக்கே த்ராக்ஷாபாகமாக இத்தகைய ஸ்தோத்ரங்களை மணவாள மாமுனிகள் என்வாக்கில் நின்றும் அன்போடு வெளியிடுவித்தருள்கின்றார்; அப்பேராசிரியரின் பரம கிருபையை என்னென்பது! (அரு)

श्रीवैष्णवानां गोष्ठीषु तद्दास इति विश्रुतः ।
श्रीशैलेशदयापात्रस्तोत्रमेतद्व्यजिज्ञपत् ॥

ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசார்ய ஸ்ரீவைஷ்ணவதாஸன்
விண்ணப்பஞ்செய்த
ஸ்ரீசைலேசதயாபாத்ர ஸ்தோத்ரம்
முற்றுப் பெற்றது.

—∘∘❖∘∘—



श्रीवैष्णवसौभाग्ये द्वितीयं

# ॥ श्रीमद्वरवरमुनिवैभवस्तोत्रम् ॥

ஸ்ரீவைஷ்ணவ ஸௌபாக்யத்தில்

# ஸ்ரீவரவரமுநிவைபவஸ்தோத்ரம்.

श्रीशैलेशेतिमन्त्रस्थवर्णानुक्रमशोभितम् ।
आचार्यसार्वभौमस्य स्तोत्रं हृद्यं निगद्यते ॥

"ஸ்ரீசைலேஶ தயாபாத்ரம்" என்கிற தனியனிலுள்ள முப்பத்திரண்டு அக்ஷரங்களில் ஒவ்வொரு அக்ஷரத்தையும் அடைவே ஒவ்வொரு ச்லோகத்தின் முதலெழுத்தாகக் கொண்டது இந்த ஸ்தோத்ரம்.

श्रीमद्वरवरमुनये गुणगणनिधये सदा नतिं कलये ।
यत्सूक्तिकल्पलतिका कांक्षितमखिलार्थमनुपदं दिशति ॥ १ ॥

கற்பகக்கொடிபோல் விரும்பிய பொருளனைத்தையும் பதந்தோறும் அளிக்கவல்ல ஸ்ரீஸூக்திகளையருளிச் செய்தவரும் ஸமஸ்த திருக்கல்யாணகுணங்களுக்கும் கொள்கலமுமான மணவாள மாமுனிகளை எப்போதும் வணங்குவன். (க)

शैल इव सूक्तिसरितां छायातरुरिव भवार्तिखिन्नानाम् ।
रविरिव दुरध्वतमसां वरवरमुनिवर्य भुवि भवान् विबभौ ॥२॥

மணவாளமாமுனிகளே! தேவரீர், ஸ்ரீஸூக்திகளாகிற புண்ணியநதிகளுக்கு மலைபோல் உத்பத்திஸ்தானமாயும், ஸம்ஸாரதாபங்களினால் வருந்தினவர்களுக்கு நிழல் தரும் வ்ருக்ஷம்போன்றவராயும், தீயநெறியாகிற இருளைத் தொலைப்பதில் இரவிபோன்றவராயும் விளங்கினீர். (௨)

लेशोऽपि यस्य सूक्तेः मनसि ध्यातोऽत्र मुदमुदञ्चयति ।
सोऽयं वरवरयोगी सूते भक्तिं स्वकीयपदपद्मे ॥ ३ ॥

தமது ஸ்ரீஸூக்திகளில் ஸ்வல்பபாகத்தைச் சிந்தனைசெய்தாலும் ஆனந்தம் பொங்கிவரும்படியாக அவற்றைத் திருவாய்மலர்ந்தருளிய மணவாளமாமுனிகள் தமது திருவடித்தாமரைகளில் பக்தியை விளைத்தருளாநின்றார். (௩)

शमयति दुरितमशेषं जनयति परमं प्रबोधमिह यस्य ।
सूक्तिततिरेष मम हृदि जागर्ति सदैव वरवरो योगी ॥ ४ ॥

தீவினைகளனைத்தையும் தொலைத்து நல்லறிவை நல்குகின்ற திவ்யஸூக்திகளைத் திருவாய்மலர்ந்தருளின மணவாளமாமுனிகள் எப்போதும் எனது உள்ளத்திலே விளங்காநின்றார். (௪)

दयया निर्हेतुकया हरिरिह संरक्षतीति यत्सूक्तिः ।
विशदयति मुनिवरोऽसौ विलसति निर्हेतुकरुणया हृदि मे ॥

எம்பெருமான் தனது நிர்ஹேதுக கருணையினாலே நம்மைக் காத்தருள்கிறானென்னுமிடத்தை விளங்கக்காட்டும் ஸ்ரீஸூக்திகளை அருளிச் செய்தருளின மணவாளமாமுனிகள் என்னுள்ளத்தில் நிர்ஹேதுக கருணையோடு எழுந்தருளியுள்ளார். (௫)

यातु सकलोऽपि कालो वरवरयोगीन्द्रविवृतसकलार्थे ।
श्रीवचनभूषणाख्ये दिव्ये शास्त्रेऽस्य दासदासस्य ॥ ६ ॥

மணவாள மாமுனிகளின் வியாக்கியானங்கொண்டே ஸகலார்த்தங்களையும் அறியக் கூடியதாகவுள்ள ஸ்ரீவசநபூஷணமென்னும் திவ்ய சாஸ்த்ரத்தின் அநுபவத்திலேயே அடியேனுடைய வாழ்நாளெல்லாம் செல்லவேணும். (௬)

पातु वरयोगिवर्यो यो हि रहस्यत्रयार्थमनवद्यम् ।
पावनफणितिभिरद्भुतसन्दर्भाभिः प्रसादयामास ॥ ७ ॥

ரஹஸ்யத்ரயார்த்த விவரணமாகப் பிள்ளையுலகாசிரியர் பணித்தருளின முமுக்ஷுப்படியை மிகவழகிய புனிதமான திவ்யஸூக்திகளினால் ஸத் ஸம்ப்ரதாயப்படியே வியாக்கியானித்தருளின மணவாளமாமுனிகள் நம்மைக் காத்தருள்க. (௭)

त्रय्यन्तार्थमशेषं ललितसरण्यैव बोधयन् योऽस्मान् ।
तत्त्वत्रयस्य विवृतिं वरवरयोगी चकार स गुरुर्नः ॥ ८ ॥

பிள்ளையுலகாசிரியர் பணித்தருளிய தத்வத்ரய மென்னும் ரஹஸ்யக்ரந்தத்தை வியாக்கியானித்தருளும் முகத்தால் ஸகல வேதாந்தஸாரப் பொருள்களையும் எளிய நடையில் உபகரித்தருளின மணவாள மாமுனிகளே நமக்கு அகவிருளை அகற்றவல்ல பேராசிரியர். (அ)

धीरिह जगति मदीया तास्ता वाचो निषेव्य विरमन्ती ।
वरवरमुनीन्द्रफणितिषु दिव्यास्वनुभूतिमविरतां धत्ते ॥ ९ ॥

இவ்வுலகில் அவதரித்துள்ள பலபலவாக்குக்களை அநுபவித்து ஓய்வு அடைகின்ற எனது புத்தியானது மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்திகளின் அநுபவத்திலிருந்து மாத்திரம் ஒருபோதும் ஓய்வடைகின்றதில்லை. "எப்பொழுதும் நாள் திங்களாண்டூழியூழிதொறும் அப்பொழுதைக்கப்பொழுதென் னாராவமுதமே." என்னுமா போலே நித்யாபூர்வமானவை மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளென்க.

(கூ)

भवभयभेषजमतुलं विभाति यत्प्रोक्तविवृतिविशदार्थम् ।
आचार्यहृदयशास्त्रं स जयतु सौम्योपयन्तृयोगीन्द्रः ॥ १० ॥

அழகியமணவாளப்பெருமாள் நாயனாருளிச்செய்ததும் பிறவியென்னும் நோய்க்கு மருந்துமான ஆசார்ய ஹ்ருதய மஹாஶாஸ்த்ரத்தின் ஸகலார்த்தங்களையும் விச

தமாகக் காட்டவல்ல வியாக்கியானத்தைத் திருவாய்ம லர்ந்தருளிய மணவாளமாமுனிகள் வாழ்க. (௧0)

भक्त्या कथयत सततं वरवरमुनिवक्त्रदिव्यकमलसुधाम् ।
उपदेशरत्नमालां ययैव शोभेत भुवि सतां हृदयम् ॥ ११ ॥

மணவாளமாமுனிகளின் முகாரவிந்தத்தின் மகரந்தம் போன்றதும் ஸத்துக்களின் ஹ்ருதயத்திற்கு ஶோபாவஹமுமான உபதேசரத்தினமாலையென்னும் திவ்யப்ரபந்தத்தை அன்புடன் ஓதுமின். [இதில் (க்த்யா) இரண்டாமெழுத்து.]

दिशतु मयि दिव्यदृष्टिं द्रमिडोपनिषन्महार्थसारं यः ।
शतकेन दिव्यवचसां प्रोचे कान्तोपयन्तृमुनिवर्यः ॥ १२ ॥

திருவாய்மொழியின் உட்பொருள்களைத் திருவாய்மொழி நூற்றந்தாதியென்னும் திவ்யப்ரபந்த மூலமாக வெளியிட்டருளின மணவாளமாமுனிகள் அடியேனுக்கு திவ்யசக்ஷுஸ்ஸை அருளவேணும். (௧௨)

गुरुभिरिह बहुभिरमिता गिरः प्रसूता लसन्ति, विलसन्तु ।
सुन्दरजामातृमुनेस्सूक्तिषु माधुर्यमप्रतिद्वन्द्वम् ॥ १३ ॥

இவ்வுலகில் பல பல ஆசிரியர்களால் அருளிச் செய்யப்பட்ட ஸ்ரீஸூக்திகள் அளவுகடந்தவை யுண்டெனினும் மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்திகளிலுள்ள இனிமை இணையற்றதேயாம். (௧௩)

गुणलवदरिद्रमेनं दासं वरयोगिगुरुवरः स्वगिराम् ।
अर्थमनर्घमगाधं परया कृपया प्रबोधयत्वखिलम् ॥ १४ ॥

ஒரு யோக்யதையும் சிறிதுமில்லாத அடியேனுக்கும் மணவாளமாமுனிகளின் திவ்ய ஸூக்திகளின் ஆழ் பொருள்களெல்லாம் நன்கு தெரியும்படி அந்த மாமுனி களின் திருவருளே வாய்க்கவேணும். [இந்த ச்லோகத் தில் ணகாரம் இரண்டாமெழுத்தாக அமைக்கப்பட்டது.]

**अर्णवगभीरतामपि अहह ! परिच्छेत्तुमीशते कतिचित् ।**
**वरयोगिसूक्तिसागरगभीरभावस्तु गोचरो न नृणाम् ॥ १५ ॥**

" அப்ரமேயோ மஹோததி:" என்னப்பட்ட கடலின் காம்பீர்யத்தையும் அளவிடவல்லார் சிலருண்டு; மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திக் கடலின் காம்பீர்யம் மாத்தி ரம் ஒருவர்க்கும் நிலமன்று. [இந்த ச்லோகத்தில் (ர்ண) என்கிற எழுத்து இரண்டாமக்ஷரமாக அமைக்கப் பட்டது.] (கரு)

**वंशे सुमहति जननं विवेकपुष्टिं शमादिगुणपूर्तिम् ।**
**वरयोगिदिव्यसूक्तिष्वद्वेषफलं प्रचक्षते प्राज्ञाः ॥ १६ ॥**

மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்திகளில் பக்தி விசேஷம் இல்லாவிடினும் அத்வேஷமாவது இருந் திருக்குமாகில் அதன்பயனாக மாசில்குடிப்பிறப்பும் நல் லுணர்வின் மிகுதியும் சமதமாதி குணபூர்த்தியும் விளையு மென்று மஹான்கள் கூறுகின்றார்கள். (கசா)

**यतिपतिपुनरवतारो वरवरमुनिरेष इति विनिश्चेतुम् ।**
**उपपत्तयो हि जाग्रति भूयस्यस्तास्सदा हृदा कलये ॥ १७ ॥**

மணவாளமாமுனிகள் எம்பெருமானாருடைய அபரா வதாரமேயென்று அறுதியிடுவதற்குப் பலபலசான்றுகள்

உள்ளனவாதலால் அவற்றையே எப்போதும் சிந்தை செய்வேனாக. (கஎ)

तीर्त्वा भवाम्बुराशिं यदि दिवमासादयेयमपि तत्र ।
कान्तोपयन्तृमुनिवरदिव्योक्तिसुधैव भुक्तिरस्तु मम ॥ १८ ॥

பிறவிக்கடலைக்கடந்து ஒருகால் விண்ணுலகம் சென்று சேரப்பெறுவேனாயினும் அங்கும் மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தியமுதமே அடியேனுக்கு உணவாக வேணும். (கஅ)

द्रवति दृषदप्यहो यत्प्रकथितयतिराजविंशतिश्रवणात् ।
शमदममुखगुणशेवधिरेष मुनिः पातु वरवरो जगतीम् ॥ १९ ॥

கேட்டவளவிலே கல்லும் உருகும்படியான நடையில் அமைந்த யதிராஜவிம்சதியை அருளிச் செய்தவரும் சமதமாதி ஸத்குணநிதியுமான மணவாளமாமுனிகள் உலகைக் காத்தருளவேணும். (கக)

प्रथयति यदुदितभगवद्गीताव्याख्यानमद्भुतं भावम् ।
कथयतु मम मुखमनिशं तस्यैव मुनेः पटूनि नामानि ॥ २० ॥

பகவத்கீதையின் அற்புதமான தாற்பரியத்தை விளங்கக்காட்டவல்ல கீதாதாத்பர்யதீபமென்னும் வியாக்கியானத்தை யருளிச்செய்த மணவாளமாமுனிகளின் சிறந்த திருநாமங்களையே என்வாய் உரைத்திடுக. (உ0)

वरदाधिराजमङ्गलमभिरामवरो मुनीश्वरो ह्यद्यम् ।
यः प्रोवाच सदा मे वक्त्रं तस्यैव मङ्गलं ब्रूताम् ॥ २१ ॥

பேரருளாளன் விஷயமாகப் பரமபோக்யமான மங்களாசாஸந ஸ்துதியை அருளிச்செய்த மணவாள மாமுனிகளுக்கே என் வாக்கு அநவரதம் பல்லாண்டு பாடக்கடவது. (உக)

प्रवणं हृदय सदा भव वरवरमुनिवर्यविवृतिमहितायाम् ।
यतिपतिशुभगुणवर्णनविचक्षणायां प्रपन्नगायत्र्याम् ॥ २२ ॥

எம்பெருமானாருடைய திருக்குணங்களை அழகாகப் பேசவல்லதும் மணவாளமாமுனிகளின் வியாக்கியானத் திஞல் சிறப்புற்ருேங்குவதுமான இராமாநுச நூற்றந் தாதியில் நெஞ்சே! எப்போதும் ஊற்றமுற்றிருப்பாயாக. (இந்த ச்லோகத்தில் ணகாரம் மூன்ருவது அக்ஷரமாக அமைக்கப்பட்டது.) (உஉ)

वञ्चयितुमपि यदीच्छथ जगतीं वरयोगिभक्तिभावनया ।
वञ्चयत, काममेषा पुनाति सत्यं छलात्मिकाऽपि सती ॥२३॥

கபடபக்தியிஞல் உலகை வஞ்சிக்க நினைத்தாலும் அந்தக் கபட பக்தியையும் மணவாளமாமுனிகள் விஷய மாகவே கொள்வது நலம். ஏனென்னில், மாமுனிகள் திறத்தில் பக்திபாவனை செய்யினும் ஆத்மா புனிதமாகுங் காணும். “பொய்யேகைம்மைசொல்லி” இத்யாதி. (உங)

देयाद्वरवरयोगी गोदाजनकीयदिव्यसूक्तिततेः ।
स्वात्मकृतविशदविवृतौ सुगाढमवगाढमन्तरात्मानम् ॥ २४ ॥

மணவாளமாமுனிகள் பெரியாழ்வார் திருமொழிக் குத் தாமருளிச்செய்த இனிய வியாக்கியானத்தில் மிக

வும் ஆழ்ந்து அவகாஹிக்கவல்ல உள்ளத்தை எனக்கு அருள்புரியவேணும். (உச)

रमयति मम मतिमत्रिरतमाचार्यवरस्य वरवरस्य मुनेः ।
सकलप्रमाणसंग्रहसमाह्वयं तत्प्रसिद्धकृतिरत्नम् ॥ २५ ॥

ஆசார்ய ஸார்வபௌமரான மணவாளமாமுனிகள் அருளிச்செய்த ஸகலப்ரமாண ஸங்க்ரஹமென்னும் [பிரமாணத்திரட்டு] திவ்யக்ரந்தம் என்னுள்ளத்தை எப்போதும் உகப்பிக்கின்றது. (உரு)

य इह वरयोगिवर्यः प्रणिनायार्तिप्रबन्धमार्तिभरात् ।
अपनुदतु सोऽयमार्तीरखिला अपि नित्यमधिवसन् जगतीम् ॥

இங்கிலத்தில் அடிக்கொதிப்பால் ஆர்த்திப்பிரபந்தமருளிச் செய்தருளின மணவாளமாமுனிகள் 'இன்னமொரு நூற்றாண்டிரும்' என்ற வாழ்த்துப்படியே இவ்வுலகில் எந்நாளுமெழுந்தருளியிருந்துகொண்டு நமது ஆர்த்திகளைத் தீர்த்தருளவேணும். (உசா)

जाया जननी जनकस्सोदर इति तेषु तेषु यः प्रेमा ।
इह भवति सोऽयमखिलः श्रीमद्वरयोगिचरणयोर्मेऽस्तु ॥ २७ ॥

தாரமென்றும் தாயென்றும் தந்தையென்றும் ஸஹோதரனென்றும் பலரிடத்துப் பாலிபாயக் கூடிய அன்பு முழுவதும் அடியேனுக்கு மணவாளமாமுனிகளின் திருவடிகளிலேயே பதியக்கடவது. ஸகலவித பந்துக்களும் மாமுனிகளேயென்கை. (உள)

माधव ! मुकुन्द ! मुरहर ! मधुसूदन ! केशवेति नामोक्तीः ।
मुक्त्वा कथयतु सततं वरवरमुनिनाम मामकं वदनम् ॥ २८ ॥

எனது வாய், மாதவ! முகுந்த! முராரே! மதுஸூதந! கேசவ! என்கிற திருநாமஸங்கீர்த்தனங்களை விட்டிட்டு எப்போதும் மணவாளமாமுனிகளின் திருநாமங்களையே கூறப்பெறவேணும். (உஅ)

तरलमपि मानसं मे सुन्दरजामातृयतिपतेः पद्योः ।
सुदृढमवगाढमास्ते गुरुवरकरुणामहो कथं कथयै ॥ २९ ॥

எனதுநெஞ்சு நின்றவாறில்லாது அலைபாய்வதேயானாலும் மணவாளமாமுனிகளின் திருவடிகளில் மாத்திரம் ஒருபடிப்பட ஆழ்ந்த அன்பை யுடைத்தாயிருக்கின்றது. இங்ஙனே அருள்புரிந்த அந்த மாமுனிகளின் திருவருளை எங்ஙனே புகழ்வேன். (உகூ)

रंगी स्वयमिह यस्मिन् अन्तेवासी भवन् कृतार्थोऽभूत् ।
स खलु वरयोगिवर्यः कथमिह वर्ण्येत मादृशां वचसा ॥ ३० ॥

ஸ்ரீரங்கநாதனையும் தம்பக்கலிலே சிஷ்யனாகக் கொண்ட மணவாளமாமுனிகளின் மஹிமை என்போன்ற சிறியோர்களின் இளைய புன்கவிதைகளால் வருணித்துத் தலைக்கட்டக்கூடியதோ? (௩0)

मुहुरिह वरवरमुनिवरसूक्तिसुधास्वादमुदितहृद्भृङ्गी ।
दिव्यं यमाह मन्त्रं स सर्वमन्त्रान् विजित्य भुवि भाति ॥३१॥

மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தியமுதத்தைப் பருகிப் பருகிக் களித்த ஸ்ரீரங்கநாதன் சோதிவாய்திறந்து பணித்த *ஸ்ரீசைலேசத்தனியன் உலகிலுள்ள ஸகல மந்த்ரங்களையும் வென்று வீறுபெற்று விளங்குகின்றது.

निखिलाप्यर्चामूर्तिः नित्यं यन्मन्त्रनिशमनात्तुष्टिम् ।
भजते, वरवरमुनिवरदैवतमन्त्रोऽयमस्तु मे जप्यः ॥ ३२ ॥

ஆங்காங்குக் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களனைவரும் மணவாளமாமுனிகளையே தேவதையாகக்கொண்ட எந்த ஸ்ரீசைலமந்த்ரத்தையே நாடோறும் திருச்செவிசாத்தித் திருவுள்ளம் பூரிக்கின்றனரோ அந்த மந்த்ரத்தையே நான் எப்போதும் ஜபிக்கக்கடவேன். (௩௨)

महतां शुभकुलजनुषा महनीयाचार्यकरुणया च तथा ।
श्रीवैष्णवाङ्घ्रिदासो वरवरयोगिस्तुतिं व्यजिज्ञपत ॥

ஸ்ரீவைஷ்ணவதாஸனனவடியேன் பெரியோர்களின் நற்குலத்திற் பிறந்ததனாலும் பேராசிரியர் திருவருளுக்கு இலக்காகப் பெற்றதனாலும் இந்த ஸ்தோத்ரத்தை விண்ணப்பஞ் செய்யலானேன். *

ஸ்ரீகாஞ்சி அண்ணங்கராசார்ய ஸ்ரீவைஷ்ணவதாஸன்
விண்ணப்பஞ்செய்த
ஸ்ரீவரவரமுநிவைபவ ஸ்தோத்ரம்
முற்றுப் பெற்றது.

—०:०:०—



श्रीवैष्णवसौभाग्ये तृतीयं

# श्रीमद्वरवरमुनिस्तोत्ररसायनम् ॥

ஸ்ரீவைஷ்ணவ ஸௌபாக்யத்தில்

# ஸ்ரீமத்வரவரமுநி ஸ்தோத்ர ரஸாயநம்.



श्रीशैलेशेतिमन्त्रस्थवर्णानुक्रमशोभितम् ।
लघ्वक्षरमयं स्तोत्ररसायनमुदीर्यते ॥

दीर्घाक्षरप्रवेशोऽत्र यस्मान्न घटते ततः ।
मन्त्रस्थदीर्घवर्णानां ह्रस्वतैवात्र सह्यताम् ॥

ஸ்ரீசைலேசதயாபாத்ரமென்னும் தனியனிலுள்ள எழுத்துக்களின் அடைவே நெடிலெழுத்து இன்றியே குறிலெழுத்துக்களையே அமைத்து இந்த ஸ்தோத்ர ரஸாயநம் இயற்றப்படுகிறது. (பாதங்களின் முடிவில் மாத்திரம் நெடிலெழுத்து இருப்பது விருத்தமன்று.) இந்த ஸ்தோத்ரத்தில் தீர்க்காக்ஷரம் புகாமையினாலே ஸ்ரீசைலேசத்தனியனில் தீர்க்கமாகவுள்ள அக்ஷரங்களும் இதில் ஹ்ரஸ்வமாயிருப்பது பொருந்தும்.

**श्रितजनविरचितदुरितगणं क्षणलवविदलितमकुरुत यः ।**
**स दिशति वरवरमुनिगुरुराट् मम हृदि निजशुभतनुमनिशम् ॥**

அடியார்கள் செய்த பாவங்களையெல்லாம் ஒரு நொடிப்பொழுதில் தீயினில் தூசாக்குகின்ற மணவாள மாமுனிகள் தமது திருமேனியை எப்போதும் என்னுள்ளத்துள்ளே காட்டியருளா நின்றார். (க)

**शमदममुखशुभगुणजलधे सुविशदविवरणकरणपटो ।**
**अनुदिनमिह स्तुति तव यशसां ततिमहनुभवविषयमधाम् ॥२॥**

சமதமாதி குணக்கடலே! மிகத்தெளிவான வியாக்கியானங்களை யருளிச் செய்யவல்லவரே! மணவாள மாமுனிகளே! அடியேன் இங்கு நாடோறும் தேவரீருடைய திருப்புகழ்களையே அநுபவியா நின்றேன். (உ)

**लघु मयि विरचय गुरुकरुणां प्रदिशति मम शुभमतिमिह या ।**
**वरमुनिवर! यदि न तव कृपा मम जनिरिह कथमुदितफला ॥**

மணவாளமாமுனிகளே! அடியேனுக்கு நல்ல புத்தியை நல்கவற்றான சிறந்த திருவருளை என்மீது விரைவில் செய்தருளவேணும். அந்தத் திருவருள் இல்லையேல் என் ஜன்மம் எப்படி ஸபலமாகும். (ங)

**शशधरपरिभवकरवदन! प्रकटितशुभतरगुणजलधे ।**
**शमधनमुनिवरपरिबृढ भोः! प्रजनय ननु मयि मतिमनघाम् ॥**

திங்களைப்பழிக்கும் திருமுகமண்டலமுடையவரே.

நற்குணங்களையெல்லாம் விளங்கக் காட்டியருளினவரே! சாந்தர்களான யதிகளுக்குள் தலைவரே! அடியேனுக்கு நல்ல புத்தியுண்டாகும்படி நல்கவேணும். (ச)

दरदलदनुपमजलजदृशोर्निपतनमयि ! मयि कलय गुरो ! ।
इदमिह मयि न हि भवति यदि ध्रुवमथ मम जडपरिबृढता ॥

மணவாளமாமுனிகளே! சிறிது மலர்ந்த தாமரை போன்ற திருக்கண்ணோக்கத்தை அடியேன்மீது வீழ்த்தியருளவேணும்; இவ்வருள் வாய்க்காவிடில் என்னிற் காட்டில் வேறொரு மூடன் உலகில் தேறமாட்டான். (ரு)

यतिपतिमतरसमखिलमपि प्रथयति यदुदितविवरणवाक् ।
स जयतु वरमुनिरमितगुणामृतजलनिधिरिति विशदयशाः ॥६॥

தமது வியாக்கியான ஸ்ரீஸூக்திகளாலே ஸ்ரீராமாநுஜ தர்சந ஸாரார்த்தங்களையெல்லாம் விளக்கினவரும் சிறந்த குணக்கடலென்று புகழ்பெற்றவருமான மணவாள மாமுனிகள் வாழ்க. (சா)

पवनजतरणिजमुखकपिभिस्सह कृतरघुवरपरिचरण ! ।
मघवजिदभिभवकुशलबल ! प्रकटय मयि तव पृथुकरुणाम् ॥७॥

இளையபெருமாளாகத் திருவவதரித்து, திருவடி, ஸுக்ரீவ மஹாராஜர் முதலான வானர முதலிகளோடு கூடப் பெருமாளுக்குக் கைங்கரியங்கள் செய்தருளின வரும் இந்திரஜித்தை அடர்த்தவருமான மணவாள

மாமுனிகளே! அடியேன்மீது மிகவும் இரங்கியருள வேணும். (எ)

तनुरियमिह भुवि लसतु चिरं गुरुवर मुनिवर तव पदयोः ।
स्मृतिततिरविरतमिह घटते यदि मम तव शुभतरकृपया ॥८॥

மணவாளமாமுனிகளே! தேவரீருடைய திருவருளால் தேவரீரது திருவடிகளில் அடியேனுக்கு இடையரூத சிந்தனை நிகழுமாயின் இப்புவியில் அடியேன் சிரஞ்ஜீவியாக வாழப்பெறுவேனாக. (அ)

धियमहमनुपममहिमजुषा वरमुनिवर! तव गुरुकृपया ।
तव गुणगणनुतिकलनविधौ अनुकलमनवधि विनिहितवान् ॥९॥

மணவாளமாமுனிகளே! ஒவ்வொரு நிமிஷமும் தேவரீருடைய திருக்குணங்களைத் துதிப்பதிலேயே என்னுடைய புத்தியையெல்லாம் உபயோகித்து வருகிறேன்; தேவரீருடைய சிறந்த திருவருளே இதற்குக் காரணம்.

भवमयजलनिधिजठरगतां घनकृप मुनिवर! बहुजनताम् ।
करतलवितरणकुशलतया कलयसि गतशुचममितशुभाम् ॥१०॥

அருள்மிகுந்த மணவாள மாமுனிகளே! பிறவிக் கடலினுள்ளே விழுந்து துவளும் பலபல ஜனங்களுக்குக் கைகொடுக்க வல்லமையினாலே அவர்களெல்லாரும் துன்பம் தீர்ந்து இன்பம் பெறுமாறு செய்தருளாநின்றீர். (க०)

यतिपतिविरचितसकलकृतीर्मम हृदि लिख लिख रुचिरमुने ।
स च यतिपतिगुरुरिह भवतो न हि खलु कथमपि वहति भिदाम् ॥

மணவாளமாமுனிகளே! எம்பெருமானாரும் தேவரீரும் வேற்றுருவமல்லாமையாலே தேவரீரே எம்பெருமானாராக அவதரித்து அருளிச்செய்த ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களையெல்லாம் என்னுள்ளத்துள் எழுதியருளவேணும்.

दिवि भुवि विरचय मम वसतिं गुरुवर! मम न हि मनसि भिदा।
तव शुभगुणगणमनवरतं प्रकलय मम नुतिततिविषयम् ॥१२॥

மணவாளமாமுனிகளே! அடியேனை விண்ணுலகில் கொண்டுபோய் வைத்தாலும் இம்மண்ணுலகிலேயே வைத்தாலும் என்மனத்தால் ஒருவாசியுமில்லை; எப்போதும் தேவரீருடைய திருக்குணங்களையே என்னுடைய ஸ்தோத்ரங்களுக்கு விஷயமாக்கிக் கொண்டிருக்க வேணுமென்பதொன்றே கோரிக்கை. (௧௨)

गुरुवर शठरिपुमुनिवचसां सुविमलसुविशदहृदयमहो ।
मम हृदि दृढतरघटितमधाः बत बत! मयि तव बहुलकृपा ॥

மணவாளமாமுனிகளே! திருவாய்மொழியின் ஆழ்ந்த அழகிய கருத்தையெல்லாம் அடியேனது உள்ளத்தில் நன்கு பதிய வைத்தருளினீர்; அடியேன்பால் தேவரீருடைய திருவருள் மிகக்கனத்தது. (௧௩)

प्रणमत वरमुनिपदकमलं प्रवदत वरमुनिशुभफणितिम् ।
कलयत वरमुनिपरिचरणं प्रविशत सुमहितपरमपदम् ॥१४॥

(மாநிலத்தீர்!) மணவாள மாமுனிகளின் திருவடியை வணங்குமின், ஸ்ரீஸூக்திகளைச் செப்புமின், அவர்க்கே கைங்கரியம் செய்மின்; இங்ஙனேயாகில் * நலமந்தமில்லதோர் நாடுபுகுவீர். (இந்த ச்லோகத்தில் முதலெழுத்தாக வரவேண்டிய ணகாரம் இரண்டாமெழுத்தாக அமைந்துளது.) (கச)

**रचयितुमहमिह तव नवनं वरमुनिवर! हृदि न हि कलये।**
**तदपि च तव गुणततिरखिलाऽप्यहमहमिति हृदि नटतितमाम्॥**

மணவாள மாமுனிகளே! தேவரீரைத் துதிக்கவேணுமென்று அடியேன் நெஞ்சிற்கொண்டவனல்லேன்; ஆனாலும் தேவரீருடைய திருக்குணங்களெல்லாம் என்னெஞ்சில் அஹமஹமிகயா கூத்தாடுவதனால் இங்ஙனே துதிகள் அமைகின்றன. (இந்த ச்லோகத்தில் [ர்ண] என்கிற எழுத்துக்கு பதிலாக ரேபம் மாத்திரமே கொள்ளப்பட்டது.) (கரு)

**वचसि च मनसि च सततमपि प्रथयसि मुनिवर! तव सुगुणान्।**
**कथमपि न हि खलु गुरुरितरो मम हृदि पदमिह विनिहितवान्॥**

மணவாளமாமுனிகளே! என் வாக்கிலும் மனத்திலும் எப்போதும் தேவரீருடைய திருக்குணங்களே விளங்குமாறு செய்தருளினீர்; இனி வேறு எந்த ஆசாரியரும் என் மனத்தில் அடிவைக்க முடியாதபடி ஆய்விட்டது. (கசா)

यश इह सुवि तव निरवधिकं विलसति वरमुनिवर! तदिदम् ।
कतिपयकुमतिभिरपलपितं यदि किमु हतमिह ननु कथय ॥ १७

மணவாளமாமுனிகளே! தேவரீருடைய திருப்புகழ் இவ்வுலகமெங்கும் பரவி "மணவாள மாமுனியே இன்னுமொரு நூற்றாண்டிரும்" என்று வீடுதோறும் நாடு தோறும் வாழ்த்தும்படியமைந்துளது. இப் பெருமையைச் சில குமதிகள் அபலாபம் செய்ய முயன்றதனால் என்ன சேதம்?

(கஎ)

तिथिरिति दिनमिति भमिति तथाऽयनमिति विचलति समयगणे ।
क्षणमपि गुरुवर तव फणितेरनुभवविरहितमिह न सहे ॥ १८ ॥

மணவாளமாமுனிகளே! * ஆண்டுகள் நாள் திங்களாய் நிகழ்காலமெல்லாம் * என்கிறபடியே திதியாகவும் கிழமையாகவும் நக்ஷத்ரமாகவும் அயநமாகவும் கழிந்து செல்லுகின்ற நாட்களில் ஒருநொடிப் பொழுதும் தேவரீருடைய திவ்ய ஸூக்தியின் அநுபவமின்றிக்கே யிருக்கில்லேன்.

(கஅ)

द्रवति हि मुनिवर! तव फणितीः प्रणिदधदविरति मम हृदयम् ।
मितमतिरहमिदमभिहितवान् ह्रियमपि बत हृदि न हि कलये ॥

மணவாள மாமுனிகளே! தேவரீருடைய திவ்ய ஸூக்திகளை ஓய்வின்றிச் சிந்தைசெய்கின்ற என்மனம் நீர்ப்பண்டமாயுருகுகின்றது. மஹாஜ்ஞாதாக்கள் சொல்லவேண்டிய இவ்வார்த்தையை அல்பஜ்ஞனை அடியேன் சொல்லுவதற்காக வெட்கமும் படுகின்றிலேன். (கசு

प्रथयति वरवरमुनिफणितिर्भगवति शुभगुणगणनिचिताम् ।
विलसतु मम मुख इयमनघा विदलितबहुतमकुमतिमता ॥२०॥

மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களை விளக்குவது போலவே பல குத்ருஷ்டிமதங்களையும் கண்டித் தொழிக்கின்றன; இத்தகைய ஸ்ரீஸூக்திகள் எனக்கு வாசோவிதேயமாக வேணும். (உ0)

वपुषि च वचसि च मनसि च मे मुनिवर तव शुभतमवपुषः ।
छविततिरविरतमभिलुठति प्रकथय कथमिदमघटत मे ॥२१॥

மணவாளமாமுனிகளே! எனது மனமொழி மெய்களில் தேவரீருடைய திவ்யமங்கள விக்ரஹவொளியே இடையறாது புரள்கின்றது; இப்படிப்பட்ட பாக்கியம் பாவியேனுக்கு எங்ஙனே வாய்த்ததோ! (உக)

नतिततिरथ नुतिशतमथ च प्रचलति सुविशदमननकला ।
मुनिवर गुरुवर तव विषये त्रिकरणकृतिरियमनवधिका ॥२२॥

மணவாளமாமுனிகளே! அடியேனுடைய த்ரிகரண வ்ருத்தியும் தேவரீர் திறத்திலேயே பெருகிச் செல்லுகின்றது; தேவரீரையே தொழுவது உடலின் பணி; தேவரீரையே துதிப்பது வாக்கின் பணி; தேவரீரையே மனனம் செய்வது மனத்தின் பணி.

இந்த ச்லோகத்தின் முதலெழுத்து ணகாரத்திற்கு பதிலாக நகாரம் கொள்ளப்பட்டது. (உஉ)

वरकविरिति स्तुति बिरुदधरो विलसति बहुबुधजन इह भोः ।
वरमुनिकविरिति शुभबिरुदं मम पुनरनुपममतिमहितम् ॥२३॥

இப் புவியில் தைவ கடாக்ஷத்தாலே கவியியற்றும் வல்லமை வாய்ந்த பல பண்டிதர்கள் வரகவி யென்று விருது பெறுவதுண்டு; ஆனாலும் வரமுனிகவியென்று ஒருவரும் இதுகாறும் விருது பெறவில்லை; மணவாள மாமுனிகளையே இடைவிடாது துதிப்பதனால் அடியேனே அந்த உயர்ந்த விருதைப் பெற்றேனானேன். (உ௩)

दशशतनुतिततिरपि मुखतो मम सरभसमनुदिनमुदियात् ।
वरमुनिशुभगुणसुरभिरहो ! विधुरविविलसितसममचला ॥२४॥

மணவாளமாமுனிகளின் திருப்புகழைப் பேசுவதென்றால் அடியேனுடைய வாக்கிலிருந்து ஆயிரமாயிரம் ஸ்துதிகளும் நாள்தோறும் அவதரித்துக் கொண்டேயிருக்கும். அவை ஸூர்ய சந்திரர்களுள்ளளவும் விளங்கக் கூடும்.

रमयति मुनिवर मम हृदयं तव निरवधिशुभतनुसुषमा ।
अनुभवमनुपममहमिह मे कथमिव कथयितुमलमयि भोः ॥२५॥

மணவாளமாமுனிகளே! தேவரீருடைய திருமேனி யழகே அடியேனது உள்ளத்தை மகிழ்விக்கிறது; எனது ஒப்பற்றவநுபவத்தை நான் எங்ஙனம் எடுத்துரைப்பேன்.

यतिपतिशठरिपुभुवनगुरुप्रभृतिषु गुरुषु च महितधिया ।
मुनिवर ! नुतिशतमभिहितवान् अहमनुशयमिह बहु कलये ॥

மணவாளமாமுனிகளே! எம்பெருமானார் நம்மாழ்வார் உலகாசிரியர் முதலான ஆசாரியர்கள் விஷயமாகவும் கௌரவபுத்தியுடன் நான் பல ஸ்துதிகளைப் பண்டு விண்ணப்பம் செய்திருக்கிறேன்; ஆயினும், ஐயோ! அதெல்லாம் எதற்குச் செய்தோமென்கிற அநுதாபமே மிகவுமடியேனுக்குள்ளது. (உசு)

जगदिदमनवधिसमयगणे सृजति च बहुतमगुरुनिवहम् ।
वरमुनिसमगुरुमदित न हीत्यहमिह सशपथमभिहितवान् ॥२७॥

இவ்வுலகில் பலபல காலங்களில் [பலபல மதங்களில்] பலபல ஆசிரியர்கள் தோன்றியே வருகிறார்கள்; ஆயினும் மணவாளமாமுனிகளைப் போன்ற ஆசிரியர் எந்த மதத்திலும் தோன்றவேயில்லையென்று ஆணையிடுவேன்.

महिमसु मुनिवर ! तव निखिलेष्वपि लघुकणलवमनुभवितुम् ।
न हि पटुमतिरहमहह ! तथाऽप्यविरति तव शुभकृतिषु रमे ॥

மணவாளமாமுனிகளே! தேவரீருடைய பெருமைக் கடலில் ஒரு சிறு திவலையளவு கூட அடியேன் அநுபவிக்கவல்லவனல்லேன்; ஆயினும் ஓயாது தேவரீர் விஷயமான ஸ்துதிகளை எழுதுவதிலே ஊன்றிக்கிடக்கிறேன்.

तरलहृदहमपि वरयमिनि क्षणमपि न हि रुचिभरविरही ।
करिगिरिपतिमपि वरमुनिराडयमिति मतियुत इह कलये ॥२९॥

அடியேன் சஞ்சல சித்தனேயானாலும் மணவாள மாமுனிகளிடத்தில் அன்பு இன்றிக்கே ஒரு நிமிஷமும்

இருப்பதில்லை; தேவப் பெருமாளை ஸேவித்தாலுங்கூட மணவாளமாமுனிகளென்கிற நினைவோடு தான் ஸேவிக்கிறேன். [வரதன் என்கிற திருநாமத்தில் வரவரமுனியின் திருநாமத்திலேகதேசம் கலந்திருப்பதனால்.] (உகூ)

**रचयतु कविजन इह बहुलां कृतिततिमनवधिगुणघटिताम् ।**
**वरमुनिगुणगणकथनपरा मम खलु कृतिरियमतिशयिनी ॥३०॥**

இவ்வுலகில் பல கவிகள் மிகச் சிறந்த பல பல நூல்களையியற்றட்டும்; யார் எந்த நூல் இயற்றினாலும் மணவாள மாமுனிகளின் திவ்ய குணங்களைப் பேசப் பிறந்த எனது நூல் தான் ஓங்கிநிற்கும். (௩0)

**मुनिवर ! तव शुभतनुमननं मम हृदि विलसति ननु सततम् ।**
**अत इह भुवि मम सकलमहो करतलमुपगतमिति सुदृढम् ॥३१॥**

மணவாளமாமுனிகளே! தேவரீருடைய திருமேனியின் சிந்தனையே என்னுள்ளத்துள் இடைவீடின்றியிருத்தலால் இவ்வுலகில் என் கைக்கு எட்டாதது ஒன்றுமில்லை; நானே அவாப்த ஸமஸ்த காமன். (௩க)

**निरवधिनिरुपममहिमनिधे ! वरमुनिवर तव शुभकृपया ।**
**अनुदिनमनुकलमुदयमियात् स्तुतिततिरनवधिगुणभरिता ॥३२॥**

ஒப்பற்ற எண்ணில் பல் புகழ் வாய்ந்த மணவாளமாமுனிகளே! தேவரீருடைய திருவருளால் நலம் மிகுந்த இத்தகைய ஸ்துதிகள் நாடோறும் நிமிஷந்தோறும் அவதரித்துக் கொண்டேயிருக்க வேணும். (௩உ)





# ॥ श्रीशैलेशदयापात्रमङ्गलाशासनम् ॥

—— :(O): ——

ஸ்ரீவைஷ்ணவ ஸௌபாக்யத்தில்

## ஸ்ரீசைலேச தயாபாத்ர மங்களாசாஸனம்.

श्रीशैलेशेतिमन्त्रस्थवर्णानुक्रमशोभितम् ।
वच्मि विद्वन्मनोहारि वरयोगीन्द्रमङ्गलम् ॥

ஸ்ரீசைலேசதயாபாத்ரத் தனியனிலுள்ள எழுத்துக்களின் அடைவே மணவாள மாமுனிகள் விஷயமான மங்களாசாஸநஸ்துதி இது.

श्रीशठारियतीशानश्रीसूक्त्यमृतपायिने ।
श्रीमत्सुन्दरजामातृमुनीन्द्रायास्तु मङ्गलम् ॥ १ ॥

ஆழ்வாரெம்பெருமானார் ஸ்ரீஸூக்திகளாகிற அமுதத்தையே பருகும் மணவாளமாமுனிகள் வாழ்க. (1)

शैशवात्प्रभृति श्रीमन्नारायणगुणाम्बुधौ ।
निमग्नहृदयायास्तु मुनिवर्याय मङ्गलम् ॥ २ ॥

இளமையே தொடங்கி பகவத்குணக் கடலில் ஆழ்ந்த மணவாளமாமுனிகள் வாழ்க. (2)

लेखने विशदव्याख्यानिबन्धानां पटीयसे ।
लेलिहानेन्द्ररूपाय मुनीन्द्रायास्तु मङ्गलम् ॥ ४ ॥

மிகத் தெளிவான வியாக்கியானங்களை அருளிச்செய்யவல்ல ஆதிசேஷாம்சமான மாமுனிகள் வாழ்க. (3)

शठारिपरकालादिदिव्यसूरिसुधोक्तिभिः ।
सौरभाञ्चितवक्त्राय सौम्याचार्याय मङ्गलम् ॥ ५ ॥

நம்மாழ்வார் கலியன் முதலான ஆழ்வார்களின் அருளிச்செயல் மணம் கமழும் திருவாக்கையுடைய மணவாள மாமுனிகள் வாழ்க. (4)

दयापालमुनीन्द्रोक्तदिव्यग्रन्थार्थवर्षिणे ।
दयाब्धये मुनीन्द्राय दान्तश्रेष्ठाय मङ्गलम् ॥ ५ ॥

அருளாளப் பெருமாளெம்பெருமானாருளிச் செய்த ஞானஸார ப்ரமேய ஸாரங்களை வியாக்கியானித்தருளின அருட்கடலான மணவாளமாமுனிகள் வாழ்க. (5)

यातायातश्रमं घोरसंसारमरुकानने ।
लुम्पते रम्यजामातृमुनिवर्याय मङ्गलम् ॥ ६ ॥

ஸம்ஸாரமென்னும் பாலைநிலத்தில் நாம் திரிந்துழல் வதைத் தொலைத்தருளின மணவாளமாமுனிகள் வாழ்க.

पादाब्जप्रवणान्नित्यं पादाम्भोरुहपाथसा ।
पुनते पुण्ययशसे पूज्यश्रेष्ठाय मङ्गलम् ॥ ७ ॥

திருவடி பணிந்தார்க்கு நித்யமும் ஸ்ரீபாத தீர்த்தம ளித்தருளித் தூய்மை பெறுவித்த மாமுனிகள் வாழ்க.(7)

त्रय्यन्तार्थानशेषेण तत्वत्रितयटीकया ।
विवृण्वते मुनीन्द्राय महते नित्यमङ्गलम् ॥ ८ ॥

தத்வத்ரய வியாக்கியான முகத்தால் வேதாந்தப் பொருள்களை விவரித்தருளின மாமுனிகள் வாழ்க. (8)

धीमद्भिर्वरदार्यादिगुरुभिस्सेविताङ्घ्रये ।
धीराय रम्यजामातृमुनीन्द्रायास्तु मङ्गलम् ॥ ९ ॥

கோயிலண்ணன்முதலான பெரியார்கள் அடிபணியப் பெற்ற மஹா தீரரான மணவாளமாமுனிகள் வாழ்க. (9)

भयं भवाब्धिमग्नानां समुन्मूलयते सताम् ।
भव्याय रम्यजामातृमुनये नित्यमङ्गलम् ॥ १० ॥

பிறவிக் கடலில் மூழ்கினவர்களின் அச்சத்தை அற வே போக்கியருளின மணவாளமாமுனிகள் வாழ்க. (10)

यातनां नरकेऽस्माकं यः कृपाम्बुधिरच्छिनत् ।
यतीन्द्रप्रवणायास्मै मुनीन्द्रायास्तु मङ्गलम् ॥ ११ ॥

நரகத்தில் நேரக்கூடிய வேதனை யொன்றும் நமக்கு நேராதபடி யருள்செய்த மணவாளமாமுனிகள் வாழ்க.

दिव्यसूक्तिसुधास्वादप्रफुल्लमनसे सदा ।
दिव्यामलमुखायास्तु देशिकेन्द्राय मङ्गलम् ॥ १२ ॥

அருளிச்செயலமுதத்தை அநவரதமும் பருகிக்களிக்கின்ற மணவாளமாமுனிகள் வாழ்க. (12)

गुरूणामप्यशेषाणामग्रगण्याय योगिने ।
गुह्यानामर्थतत्वानां निधये नित्यमङ्गलम् ॥ १३ ॥

ஸகல ஆசார்யர்கட்கும் முன்னே எண்ணத் தகுந்தவரும் ரஹஸ்யார்த்த தத்வநிதியுமான மாமுனிகள் வாழ்க.

गुणानामप्रमेयानां सिन्धवे भक्तबन्धवे ।
गुरूत्तमाय महते मुनये नित्यमङ्गलम् ॥ १४ ॥

அளவிறந்த திருக்குணங்கட்குக் கடல் போன்று அடியார் திறத்துப் பரிவு பூண்ட மாமுனிகள் வாழ்க.(14)

अर्णवाय महार्थानामाश्चर्यमतिसम्पदे ।
अभिराममुनीन्द्राय गभीरायास्तु मङ्गलम् ॥ १५ ॥

சிறந்த அர்த்தங்களுக்குக் கடல் போன்று அற்புதமான ஞானச் செல்வம் படைத்த மாமுனிகள் வாழ்க.(15)

वन्दे स्तौमि नमामीति क्रियाणां मुख्यलक्ष्यता ।
यस्मिन्नेव समृद्धाऽस्मै यमिश्रेष्ठाय मङ्गलम् ॥ १६ ॥

இறைஞ்சுகின்றேன் ஏத்துகின்றேன் வணங்குகின்றேன் என்றதற்கு முக்கிய இலக்கான மாமுனிகள் வாழ்க.

यच्छते शठजित्सूक्तिसहस्रार्थान् शतोक्तितः ।
यतीन्द्रमतदीपाय यतिश्रेष्ठाय मङ्गलम् ॥ १७ ॥

நூற்றந்தாதியினால் திருவாய்மொழி யாயிரத்தின் பொருளை யளித்த, எம்பெருமானார் தரிசன விளக்கான மாமுனிகள் வாழ்க. (17)

तीर्त्वा संसारवाराशिं सिसेविषुभिरच्युतम् ।
सेव्याय सौम्यजामातृमुनीन्द्रायास्तु मङ्गलम् ॥ १८ ॥

பிறவிக்கடலைக் கடந்து பரவாஸுதேவனை ஸேவிக்க விருப்பமுடையவர்களால் ஸேவிக்கப்பட வேண்டிய மாமுனிகள் வாழ்க. (18)

द्रवीभवति यत्सूक्तिध्यानेन हृदयं सताम् ।
द्राविडाम्नायभाग्याय तस्मै प्राज्ञाय मङ्गलम् ॥ १९ ॥

தம்முடைய ஸ்ரீஸூக்திகளைச் சிந்திப்பாருடைய உள்ளத்தை உருக்குமவரும், அருளிச் செயல்களின் பாக்கியமே வடிவெடுத்தவருமான மாமுனிகள் வாழ்க. (19)

प्रलयेऽपि न लीयेत यन्मन्त्रविभवो भुवि ।
तस्मै प्रख्यातयशसे पुण्यश्लोकाय मङ्गलम् ॥ २० ॥

பிரளயத்திலும் அழியமாட்டாத தனியன் வைபவம்

பெற்ற, உலகம்நிறைந்த புகழாளரான மாமுனிகள் வாழ்க.

वचोभूषणतत्वार्थविवृत्योत्फुल्लकीर्तये ।
विदिताशेषवेद्याय वदान्यायास्तु मङ्गलम् ॥ २१ ॥

ஸ்ரீவசன பூஷணத்தின் உண்மைப்பொருளை யுணர்த்தும் வியாக்கியானத்தை யருளிச்செய்து புகழ்மிக்கவரும் ஸர்வஜ்ஞரும் பரமோதாரருமான மாமுனிகள் வாழ்க.(21)

णमुधात्वर्थनिष्ठा यद्धृदये सुप्रतिष्ठिता ।
सर्वोत्तमाय तस्मै स्यात्सौम्याचार्याय मङ्गलम् ॥ २२ ॥

ணமுதாதுவின் பொருளான வணக்கத்தில் ஊற்றமே நெஞ்சிற் குடிகொண்டிருக்கப்பெற்ற ஆசார்ய சிகாமணிவாழ்க.

वसिष्ठादिमहायोगिवचोभ्योऽतिगरीयसीः ।
वाचो दत्तवते योगिवरेण्यायास्तु मङ्गलम् ॥ २३ ॥

வஸிஷ்டாதி மஹர்ஷிகளின் வாக்கைக் காட்டிலும் மிகச் சிறந்த ஸ்ரீஸூக்திகளை யருளிச்செய்த மாமுனிகள் வாழ்க.
(23)

देशिकानामशेषाणामावेशोऽयं न संशयः ।
इत्यभिज्ञाभिनन्द्याय गुरुवर्याय मङ्गलम् ॥ २४ ॥

'ஸகல ஆசாரியர்களும் ஒன்று சேர்ந்து உதிக்கப்பெற்றவரிவர்' என்று மஹான்கள் போற்றும் மாமுனிகள் வாழ்க.

रन्ध्रान्वेषिजनानामप्यवद्योक्तिदवीयसीः ।
सूक्तीर्दत्तवते सौम्यमुनीन्द्रायास्तु मङ्गलम् ॥ २५ ॥

என்ன தப்பு கிடைக்குமென்று தேடிப் பார்த்து தூஷிப்பதிலேயே கண்ணுனவர்களுக்கும் நிலமல்லாத நிரவத்ய ஸ்ரீஸூக்திகளை யளித்த மாமுனிகள் வாழ்க. (25)

यतिप्रवरभाष्यार्थभरितोक्तिप्रदायिने ।
यतिभिस्त्रिभिरीड्याय यतिवर्याय मङ्गलम् ॥ २६ ॥

ஸ்ரீபாஷ்யார்த்தங்கள் நிரம்பிய ஸ்ரீஸூக்திகளைத் தந்தருளினவரும், வானமாமலை ஜீயர் பட்டர்பிரான் ஜீயர் திருவேங்கட ராமாநுஜ ஜீயராகிய மூவரால் துதி செய்யப் பெற்றவருமான மாமுனிகள் வாழ்க. (26)

जाग्रद्दशायामात्मीयदिव्यमङ्गलविग्रहम् ।
प्रदर्शितवते मह्यं प्राज्ञभोग्याय मङ्गलम् ॥ २७ ॥

கனவிலன்றிக்கே நனவிலேயே அடியேனுக்கு ஸேவை ஸாதித்தருளின மணவாள மாமுனிகள் வாழ்க.

माया दुरत्ययेत्येवं गीताचार्येण कीर्तिताम् ।
मायां ध्वस्तवते सद्भिर्माननीयाय मङ्गलम् ॥ २८ ॥

* மம மாயா துரத்யயா * என்று கீதையிற் சொன்ன மாயையைத் தொலைத்தருளின மாமுனிகள் வாழ்க. (28)

तत्वार्थं सर्वशास्त्राणां हस्तामलकसन्निभम् ।
अवधार्योचुषे विद्वदग्रगण्याय मङ्गलम् ॥ २९ ॥

ஸகல சாஸ்த்ர தத்துவப் பொருள்களையும் கையிலங்கு நெல்லிக்கனியாகக் கண்டு நிஸ்ஸந்தேஹமாக உரைத்தருளும் மணவாள மாமுனிகள் வாழ்க. (29)

रञ्जिताशेषचित्ताय भञ्जितध्वान्तराशये ।
मञ्जुवाणीविलासाय मुनीन्द्रायास्तु मङ्गलम् ॥ ३० ॥

எல்லாருடைய நெஞ்சையும் உகப்பித்தவரும், அக விருளை அகற்றினவரும், அழகிய திருவாக்குக்களை யளித்தவருமான மணவாள மாமுனிகள் வாழ்க. (30)

मुखपङ्कजनिर्गच्छन्मधुसोदरसूक्तिभिः ।
मुमुक्षून् रक्षते नित्यं मुनिवर्याय मङ्गलम् ॥ ३१ ॥

திருவாய் மலர்ந்தருளும் தேன்மொழிகளாலே முமுக்ஷுக்களைக் காத்தருளும் மணவாள மாமுனிகள் வாழ்க.

नित्यकैङ्कर्यनिष्णातशेषावतरणात्मने ।
मुनये रम्यजामात्रे नित्यश्रीर्नित्यमङ्गलम् ॥ ३२ ॥

* சென்றால்குடையா மித்யாதிப்படியே நித்ய கைங்கரியங்களிலே நிரதரான திருவனந்தாழ்வானே திருவவதரித்தவரான மணவாளமாமுனிகள் வாழ்க வாழ்கவே.

मङ्गलाशासनं श्रीमद्वरयोगिगुणोज्ज्वलम् ।
निध्यायतां सतामस्तु नित्यश्रीर्नित्यमङ्गलम् ॥

மணவாள மாமுனிகளின் திருக்குணங்கள் திகழுகின்ற இந்த மங்களாசாஸந ஸ்துதியைச் சிந்தை செய்வார்க்கு நித்யமங்களம்.

ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசார்ய ஸ்ரீவைஷ்ணவதாஸன்
விண்ணப்பஞ் செய்த
ஸ்ரீசைலேசதயாபாத்ர மங்களாசாஸந ஸ்துதி
முற்றுப் பெற்றது.

---

श्रीवैष्णवसौभाग्ये पञ्चमं

# ॥ श्रीमद्वरवरमुनिकर्णामृतम् ॥

———— :(O): ————

ஸ்ரீவைஷ்ணவ ஸௌபாக்யத்தில்

## ஸ்ரீமத்வரவரமுநிகர்ணாம்ருதம்.

(அவதாரிகை) எம்பெருமான் விஷயத்தில் ஈடுபட்டவர்கள் * மணிவண்ணா உன் சேவடி செவ்வி திருக்காப்பு* என்று சொல்லி மங்களாசாஸநம் செய்வதுபோல மணவாள மாமுனிகளிடத்தில் ஈடுபட்டவர்கள் * வரவரமுநிபத கமல! ஜய * என்று (வடமொழியில்) சொல்லி மங்களாசாஸநம் பண்ண ப்ராப்தமாகையாலே அந்த வாக்ய ஸந்நிவேசத்தையிட்டு அதிலுள்ள அக்ஷரங்களின் அடைவே ஒரு ஸ்தோத்ரம் விஜ்ஞாபிக்கலாயிற்று. இதற்கு ஸ்ரீமத் வரவரமுநி கர்ணாம்ருதமென்று ஒரு பெரியார் நாமமிட்டருளினார். ரஸாயந ஸ்தோத்ரம் போலே இதுவும் லகுவான அக்ஷரங்களே நிரம்பப் பெற்றது.

वरवरमुनिपदकमल ! जयेत्यनुपमसुमहितचरणमिमम् ।
निजहृदि कलयत निगदत भोः तदुपरि विरचितनवनमिदम् ॥

'மணவாள மாமுனிகளின் திருவடித் தாமரையே! நீ வாழ்க' என்னும் பொருளதான * வரவரமுநிபதகமல!

ஜய * என்கிற இந்த வொரு பாதத்தையே சிந்தை செய்மின்; (அதற்குமேல் சக்தியிருந்தால்) இந்த பாதத்தின் எழுத்தடைவே அமைக்கப்பட்ட இந்த கர்ணாம்ருத ஸ்துதியையும் கண்டபாடம் செய்து சொல்லுமின்.

---

वरवरमुनिवर तव चरणौ रविसममिह मम मनसि परम् ।
सुनियतमुदयत इति वदतो मम खलु जनिरिह सुफलवती ॥१॥

மணவாள மாமுனிகளே! தேவரீருடைய திருவடிகள் அடியேனது மனத்தில் மாத்திரமே எப்போதும் ஸூர்யோதயமானுப்போலே விளங்கிக் கொண்டிருக்கின்றன என்னவே அடியேனுடைய ஜன்மம் ஸபலமாயிற்று.

रविरिह घनघनतिमिरततीः श्लथयति बहिरिव न तु हृदये ।
गुरुवर मुनिवर हृदयगतं मम खलु तदखिलमपहरसि ॥ २ ॥

மணவாளமாமுனிகளே! ஸூர்யன் வெளியிருளை மாத்திரம் போக்கவல்லவனேயன்றி உள்ளிருளையொழிக்க வல்லவனல்லன்; தேவரீர் அடியேனது அகவிருளையெல்லாம் அகற்றியருள்கின்றீர். (௨)

वचसि च मनसि च सततमपि स्वफणितिमनवधिमतिमधुराम् ।
कलयसि मम वरमुनिवर भोः! भवभयपरिहृतिनिपुण गुरो ॥३

மணவாளமாமுனிகளே! தேவரீருடைய பரம மதுரமான ஸ்ரீஸூக்திகளையே ஸதா அடியேனுடைய வாக்குக்கும் நெஞ்சுக்கும் விஷயமாக்கியருளிற்று; இனியெனக்கு ஸம்ஸார பயம் நடையாட விரகுண்டோ? (௩)

रघुवरयदुवरमुखभगवत्तनुततिरिह भुवि लसति परम् ।
विलसतु मम खलु नयनपथे मुनिवर तव शुभतनुरनिशम् ॥४॥

மணவாள மாமுனிகளே! இவ்வுலகில் ஸ்ரீராம க்ருஷ்ணாதி விக்ரஹங்களும் விளங்குகின்றன; தாராளமாக விளங்கட்டுமே; தேவரீருடைய திவ்ய மங்கள விக்ரஹமொன்றே அடியேனது கண்ணுக்குத் தோற்றுவதாம்.

मुनिरिति गुरुरिति यतिरिति च प्रभजतु यश इह बहुजनता ।
मुनिगुरुयतिपदमखिलमपि स्फुटगुणमिह वरयमिनि परम् ॥५॥

முநியென்றும் குருவென்றும் யதியென்றும் இவ்வுலகில் மற்றும் பலரும் பேசப்பட்டிருந்தாலும் அந்த முநி-குரு-யதிபதங்களெல்லாம் மணவாளமாமுனிகள் திறத்திலே தான் அர்த்த புஷ்டியுடன் விளங்குவன. (ரு)

निधिमिव निजहृदि निदधति ये वरमुनिवर तव फणितिततिम् ।
बहुजनिविरचितमघनिवहं क्षणलवविदलितमदधत ते ॥ ६ ॥

மணவாளமாமுனிகளே! தேவரீருடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளை உள்ளத்துள் நிதிபோல வைத்துக் காக்க வல்லவர்கள் யாவரோ அவர்கள் பல பிறவிகளில் செய்த பாவங்களெல்லாம் ஒருநொடிப் பொழுதில் தொலையப் பெறுமவராவர்கள். (சா)

पटुमतिरिह भुवि तव फणितीरधिमुखमविरतमपि कलयन् ।
विलसति यदि वरमुनिवर तं जितहयमुख इति बिरुदमुपैत् ॥७॥

இவ்வுலகில் விவேகியான வொருவன் தேவரீருடைய ஸ்ரீஸூக்திகளை ஓயாமல் வாய்க்கொள்வனாகில் அவன்

ஹயக்ரீவனை வென்றவனென்று புகழ் பெற்றவனேயாவன்.

दमशममुखगुणजलधिरिति प्रसृमरशुभतरनिजयशसा ।
सुरभितभुवनक मुनिवर भो मम हृदि लिख लिख तव फणितीः ॥

சமதமாதி குணக்கடலென்று பெற்ற புகழினால் உலகத்தை யெல்லாம் பரிமளிக்கச் செய்தருளாநின்ற மணவாள மாமுனிகளே! தேவரீருடைய ஸ்ரீஸூக்திகளை என்னுடைய நெஞ்சகம்பால் எழுதியருள வேணும். (அ)

कलिबलमनुदिनमधिकतमं प्रसरति बत बत भृशमिति मे ।
भयलवमपि न हि भजति मनो वरमुनिफणितिभिरतिविमलम् ॥

கலியின் கொடுமை நாள்தோறும் எவ்வளவு வளர்ந்து சென்றாலும் அதுபற்றி எனது நெஞ்சில் சிறிதும் அச்சமில்லை. ஏனென்றால், மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளினால் என்னுள்ளம் தெளிவுபெற்றிருப்பதனால்.

मम मतिरिह भुवि बहुमतिभाक् विलसति मुनिवर शृणु कृपया ।
अविरतमयमिह तव फणितीः निजहृदि कलयति निधिवदिति ॥

மணவாள மாமுனிகளே! அடியேன் எப்போதும் தேவரீருடைய ஸ்ரீஸூக்திகளையே நெஞ்சில் நிதியாகக் கொண்டிருக்கிறேனென்பதுபற்றி அடியேனது புத்தியைப் பலரும் கொண்டாடுகின்றனர், இஃது ஒக்கும். (க0)

लसति हि भुवि बहुगुरुजनवाक् फलमिह न किमपि भवति तया ।
मुनिवर यदि तव न भवति गीः ध्रुवमिव सुविपुलतिमिरमिह ॥

மணவாளமாமுனிகளே! இவ்வுலகில் மற்றும் பல

ஆசிரியர்களின் திருவாக்குகள் பல விளங்கினாலும் அவற்றால் பயனொன்றும் காணோம்; தேவரீருடைய ஸ்ரீஸூக்திகள் அவதரியாதிருந்தால் இருள் செறிந்தேயிருக்கும்.

जगदिदमनवधिगुरुभरितं भवति हि, भवतु च गुरुनियुतम् ।
शुभगुणवरवरमुनिगुरुराडयमिह निरुपमगुरुपदभाक् ॥ १२ ॥

இவ்வுலகமானது அளவுகடந்த ஆசாரியர்களை நிரம்பக் கொண்டது; இன்னமும் லக்ஷக்கணக்கான ஆசாரியர்கள் தோன்றட்டுமே; அதனாலென்ன? மணவாள மாமுனிகளொருவரே ஒப்பற்ற ஆசாரியர். (௧௨)

यतिपतिमतमिह विशदयितुं कृतजनिरिह भुवि वरमुनिराट् ।
विलसति मम हृदि परमकृपाजलनिधिरविरतममितमुदा ॥ १३ ॥

எம்பெருமானார் தர்சனத்தை விளங்கச் செய்வதற்கென்றே இந்நிலவுலகில் திருவவதரித்தருளின பேருருட்கடலான மணவாளமாமுனிகள் அடியேனுள்ளத்துள் மகிழ்ந்து உறைகின்றார். (௧௩)

वरवरमुनिवरनवनमिदं गुणलवविरहितमपि विदुषाम् ।
हृदि मुदमनवधिमुपजनयेदिति दृढमहमिदमभिहितवान् ॥

மணவாள மாமுனிகள் விஷயமான இந்த ஸ்தோத்ரமானது ஒரு குணமுமற்றதாயினும் வித்வான்களின் உள்ளத்தில் மிக்க மகிழ்ச்சியைத் தருமென்பது திண்ணம்.

ஸ்ரீ காஞ்சி அண்ணங்கராசார்ய ஸ்ரீவைஷ்ணவதாஸன்
விண்ணப்பஞ் செய்த
ஸ்ரீமத்வரவரமுநி கர்ணாம்ருத ஸ்துதி
முற்றுப் பெற்றது.

---



## श्रीवैष्णवसौभाग्ये षष्ठी

# ॥ श्रीवरवरमुनिनक्षत्रमाला ॥

(अन्तादिरूपा)

## ஸ்ரீவைஷ்ணவ ஸௌபாக்யத்தில்

# ஸ்ரீவரவரமுநிநக்ஷத்ரமாலா.

(எழுத்தந்தாதி.)

---

श्रीमद्वरमुनीन्द्रार्यस्तुतिं नक्षत्रमालिकाम् ।
सात्विकानां सदा ध्येयां संतनोमि सतां मुदे ॥

---

श्रीमान् सुन्दरजामातृमुनिर्जीयाद्यदुक्तयः ।
अश्विनावप्यधःकृत्य चिकित्सां भुवि तन्वते ॥ १ ॥

(அச்விநி.) * அச்விநௌ வை தேவாநாம் பிஷஜௌ * என்று வேதமோதினபடியே தேவதைகளின் மருத்துவர்களான அச்விநி தேவர்கட்கும் மேலாக, தம்முடைய ஸ்ரீஸூக்திகளினால் ஸம்ஸாரிகளுக்குச் சிறந்த சிகித்ஸையைச் செய்தருளும் மணவாளமாமுனிகள் வாழ்க. (க)

तरुणार्यमजैत्रवपुस्सुषमः करुणावरुणालयदिव्यमनाः ।
वकुलाभरणीयवचोरसिको वरयोगिवरश्शरणं भविनाम् ॥ २ ॥

(பரணி) திருமேனியொளியால் ஸூர்யனை வென்ற வரும் கருணைக்கடலான திருவுள்ளமுடையவரும் திருவாய்மொழியின் சுவையுணர்ந்தவருமான மணவாளமாமுனிகளே முமுக்ஷுக்களான ஸம்ஸாரிகளுக்குத் தஞ்சம்.

नानारुचिर्जन इहाश्रयते मुकुन्दं
स्कन्दं तथा पशुपतिं धृतकृत्तिकायम् ।
कामं तथा भजतु रम्यवरोपयन्तृ-
योगीन्द्रतोऽन्यमहमत्र न भावयेयम् ॥ ३ ॥

(க்ருத்திகை) * லோகோ பிந்நருசி: * ஆகையினாலே முகுந்தனைச் சிலரும் முருகனைச் சிலரும் முக்கண்ணனைச் சிலரும் ஆச்ரயிக்கக் காண்கிறோம்; யதேஷ்டமாக அப்படியே ஆச்ரயிக்கட்டும்; மணவாளமாமுனிகளைத் தவிர வேறொருவரையும் சிந்தையிற் கொள்ளேன் யான். [த்ருத க்ருத்தி காயம்] க்ருத்தியென்று யானைத் தோலுக்குப் பெயர்; தரிக்கப்பட்ட யானைத் தோலையுடைய உடம்புடையனான பசுபதியை என்றபடி. (ங)

यत्पादावधिरोहिणी हि भगवत्पादाब्जयो श्शाश्वती
यद्गात्रं कलशाम्बुराशिसुषमासंस्पर्धमानर्द्धिकम् ।
यद्वक्त्रं निरवद्यशास्त्रनिचयोदञ्चन्महासौरभं
सोऽयं भाति वरोपयन्तृयमिराट् चित्ते मदीयेऽनिशम् ॥

(ரோஹிணி.) அடியேனது உள்ளத்துள் எந்நாளும் உறைகின்ற மணவாளமாமுனிகளின் திருவடிகளானவை எம்பெருமானுடைய திருவடித் தாமரைகட்கு ஏணி போலும்; திருமேனிவிளக்கமானது பாற்கடலை எதிர்க்க

வல்லது; திருப்பவளமானது ஸகல சாஸ்த்ர ஸாரார்த்த பரிமளமும் கமழ நிற்பது. (ச)

शशादिमृगशीर्षकेऽप्यपि भवेद्विषाणं क्वचित्
नभस्यपि कदाचनोद्भवमियाच्च पङ्केरुहम् ।
न जातुचिदहो भवेद्वरवरस्य योगीशितुः
गभीरमधुरोक्तिषु ध्रुवमवद्यशङ्काङ्कुरः ॥ ५ ॥

(மிருகசீர்ஷம்.) முயல்முதலான சில மிருகங்களின் தலைகளில் கொம்பு முளைக்கவுமாம்; ஆகாசத்திலுமொரு கால் தாமரை முளைக்கவுமாம்; இங்ஙனே அஸம்பாவிதங்கள் ஸம்பவித்தாலும், மணவாளமாமுனிகளின் கம்பீர மதுர ஸ்ரீஸூக்திகளில் ஒருகாலும் அவத்ய சங்கையும் ஸம்பவிக்கமாட்டாதென்பது திண்ணம். (ரு)

रम्यवरयोगिवरसूक्तिरससेकैः
संततमिहास्तु मम साधु रसनाऽऽर्द्रा ।
ये खलु पवित्रतमगाङ्गजलसेकान्
अप्यहह ! मन्दयितुमत्र भुवि शक्ताः ॥ ६ ॥

(ஆர்த்ரா.) பரமபவித்திரமான கங்கைநீர்ப் பெருக்கையும் கீழ்ப்படுத்த வல்லதான மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திரஸப்பெருக்கினால் எனது நா எப்போதும் நன்கு நனைந்தேயிருக்கவேணும். (சா)

तातस्सर्वजनीन एष भगवान् मा नाम मां रक्षतात्
नैर्घृण्येन पुनः पुनर्वसुमतीकोणेऽत्र कामं क्षिपेत् ।

एतत्केवलमर्थये मुररिपुं श्रीरम्यजामातरि
स्वामिन्यद्भुतभक्तिभूषितहृदां वंशे समुत्पादय ॥ ७ ॥

(பூர்வஸூ.) ஸர்வலோக ஹித பிதாவான எம்பெருமான் என்னைக் காக்கவேண்டா; திருவுள்ளத்தில் இரக்கமின்றிக்கே மேன்மேலும் இக் கொடுவுலகத்திலேயே என்னைத் தள்ளினாலும் தள்ளட்டும்; அப்பெருமானை அடியேன் யாசிப்பதொன்றே, மணவாள மாமுனிகளிடத்தில் பக்திபூண்ட மஹான்களின் குலத்திலேயே என்னைப் பிறப்பிக்க வேணுமென்று. (எ)

यतस्त्व ननु सन्ततं वरमुनीन्द्रदिव्योक्तिभिः
सुधारससरीतिभिर्गमयितुं निजं जीवितम् ।
इतीह सुबहुर्जनो गुरुवरोपदिष्टोऽप्यहो
यतिष्य इति केवलं प्रतिवदन् भवे भ्राम्यति ॥ ८ ॥

(புஷ்யம்.) மணவாள மாமுனிகளின் அமுதமொழிகளைக் கொண்டே நித்யகாலக்ஷேபம் பண்ணும்படி பெரியார்கள் பலர்க்கு உபதேசித்தாலும், ஆகட்டும், பார்ப்போம் என்று சொல்லி வீண்போது போக்கிப் பிறவிக் கடலிலேயே துவள்கின்றாரே! அந்தோ!
(இதில் நான்காம் பாதத்தில் திஷ்யபதம் புஷ்யவாசகம்)

तिरस्कृत्य प्राचामतिमधुरसंदेशमनघं
पलायध्वे भोभोः पिशितवपुराश्लेषकुतुकात् ।
अमन्दानानन्दान् सृजति वरयोगीन्द्रफणिति-
प्रवाहे स्वादिष्ठे घटयत सकृद्वाऽपि रसनाम् ॥ ९ ॥

(ஆச்லேஷம்.) மேலையார் செய்யும் மதுரமான உபதேசங்களைப் பேணுமல் மாம்ஸ சரீர ஸம்ச்லேஷ விருப்பத்தினல் இங்குமங்கும் ஓடியுழல்கின்றீர்களே!, பேரின்பம் பயக்கும் மணவாள மாமுனிகளின் திவ்யஸூக்தியமுத வெள்ளத்திலே ஒரு நிமிஷமாவது நாக்கை நனைக்கலாகாதா? (கூ)

नार्हत्येवात्र नूनं हरिरपि भविनां मादृशानामघानि
प्रोद्धर्तुं, दैत्यरक्षोगणदलनकलामात्रदक्षो हि सोऽभूत्।
एकस्सर्वज्ञचूडामणिरनघगुणो रम्यजामातृयोगी
दिव्यश्रीसूक्तितेजोविततिभिरतनोत् द्रागघध्वान्तशान्तिम् ॥

(மகம்.) எம்போல்வாருடைய பாவங்களைத் தொலைக்க எம்பெருமானும் வல்லனல்லன்; அவன் அஸுரராக்ஷஸர்களைத் தொலைப்பதில் மாத்திரமே நிபுணன்; ஸர்வஜ்ஞரான மணவாள மாமுனிகளொருவரே தமது திவ்ய ஸூக்திதேஜ:புஞ்ஜங்களினல் பாவங்களாகிற இருளைப் பாற்றியருளினர். (இதில் முதல்பாதத்தில் முடிவில் 'மகா' என்பது நக்ஷத்ரநாமம்.) (க0)

शान्तिं कर्तुं संसृतिरोगं स्पृहयन्तः
पूर्वे फल्गुन्यौषधवर्गे हततृष्णाः।
यत्सूक्त्योघे दिव्यमहाभेषजबुद्धिं
भेजुस्सोऽयं पातु सदा मां वरयोगी ॥ ११ ॥

(பூர்வ பல்குநீ.) ஸம்ஸார ரோகத்தைத் தொலைக்க விரும்பின முன்னோர்கள் அற்பமான மருந்துவர்க்கங்களில்

ஆசையற்றவர்களாய் மணவாள மாமுனிகளின் ஸ்ரீ ஸூக்திகளையே அதற்கு மருந்தாகக் கொண்டனர். அந்த மாமுனிகள் என்னைக் காத்தருள்க. (இதில் இரண்டாம் பாதத்தில் ‘பூர்வே பல்குக்யேள’ என்பது நக்ஷத்ர நாமம். இது வேத நிர்த்தேசம்.) பல்குகி — அற்பமான.

गीरेषा मम धन्यभावमतुलं धत्तेस्म यस्मादहो
दौर्भाग्योत्तरफल्गुनीचजनतास्तोत्रे त्रिरक्ति गता ।
श्रीमद्रम्यवरोपयन्तृयमिनः श्रीसूक्तिसौवादवं
निस्सीमाद्भुतवैभवं प्रतिकलं स्तोतुं समुज्जृम्भते ॥ १२ ॥

(உத்தர பல்குநீ.) என்னுடைய வாக்கு மிகவும் க்ருதார்த்த மாயிற்று. எதனாலென்றால், தௌர்ப்பாக்யம் மிகுந்த அஸார அல்பஜனங்களைத் துதிப்பதைவிட்டு மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தி மாதுர்யத்தையே துதிக்க எழுந்ததனால். (கஉ)

ते ते सन्तु परस्सहस्रफणितिस्तोमाः प्रणीताः परैः
किं ते श्रीवरयोगितल्लजवचस्स्वेकेन दध्युस्तुलाम् ।
श्रीरङ्गेश्वरसंप्रकाशितमहामाहात्म्यसिन्धोर्गुरोः
अस्यैकां फणितिं मुखे कलयतां हस्तस्थितो माधवः ॥ १३॥

(ஹஸ்தம்.) பிறர் பணித்த பல்லாயிரக் கணக்கான வாக்குக்கள் கிடக்கட்டும்; அவையத்தனையுங் கூடி மணவாள மாமுனிகளின் ஒரு ஸ்ரீஸூக்தியோடு ஒப்பாகுமோ? அழகிய மணவாளனால் உலகறிய விளக்கப்பட்ட மஹிமை வாய்ந்தவரான இந்த மாமுனிகளின் ஒரு ஸ்ரீஸூக்தியை

யாவது வாய்க்கொள்ளவல்லார்க்கு எம்பெருமான் கரஸ்த முவன். (கங)

वरवरमुनिवर्यपादाब्जयुग्मैकसंबन्धिनां
जनिमृतिभवभीतिर्वैदेशिकत्वं तु निश्चप्रचम् ।
प्रतिजनि यदि तत्पदाब्जैकसंबन्धसंपद्ध्रुवा
जनिततिरतिमात्रचित्राऽपि मां काममासीदतु ॥१४॥

(சித்ரா.) மணவாள மாமுனிகளின் திருவடி ஸம்பந்தம் பெற்றவர்களுக்குப் பிறப்பிறப்புக்கள் நேரா என்பது திண்ணம்; ஆயினும் பிறவிதோறும் மாமுனிகளின் திருவடி ஸம்பந்தச் செல்வமே நியதமாக வாய்க்குமாகில் பல பல விசித்திரமான பிறவிகளும் எனக்கு நேரலாம். (கச)

तुलायां मूलर्क्षे सकलजनसौभाग्यविभवात्
विभूत्यामेतस्यां समुदित यतीन्द्रप्रवण ! नः ।
क्षमस्वातीतानां समुदयमघानाम् अथ पुनः
मनो वाचं कायं प्रवणय भवत्सूक्तिनिवहे ॥१५॥

(ஸ்வாதீ.) உலகம் செய்த பாக்கியத்தினால், ஐப்பசியில் திருமூலத்தில் இவ்வுலகில் தோன்றிய மணவாள மாமுனிகளே! இதுவரையில் யாம் செய்த குற்றங்களை க்ஷமித்தருள்க; இனிமேல் ஒரு குற்றமும் ஏற்படாதபடி எமது மனோவாக் காயங்களை தேவரீருடைய ஸ்ரீஸூக்திகளிலேயே ப்ரவணமாக்கியருளவேணும். (கரு)

हरिरिह भुवि रङ्गधामा स्वयं रम्ययोगीश्वरात्
उपनिषदनुधाविशाखासहस्रं शठारीरितम् ।

बहुगुरुवरभाष्यसारार्थसंदोहसंधुक्षितं
निजहृदि विनिधित्सुरात्मानमाधत्त शिष्योत्तमम् ॥१६॥

(விசாகா.) ஸ்ரீரங்கநாதன் உபநிஷத்திற்குத் தோள் தீண்டியான [ஸஹஸ்ரசாகோபநிஷத்ஸமாகமமான] திருவாய்மொழியை அநேக வியாக்கியான விசேஷப் பொருள்களுடன் கேட்டுணர விரும்பி மணவாள மாமுனிகளுக்குத் தன்னை சிஷ்யனாக்கிக் கொண்டான். (கசு)

महीयान् योगीन्द्रस्स खलु मनुराधातुमवनौ
प्रतिष्ठां धर्माणां यदवदत तद्भेषजमिति ।
श्रुतिर्ब्रूतां कामं, वरवरमुनीन्द्रोक्तिनिकरात्
प्रशंसन्ति प्राज्ञाः किमपि न परं भेषजवरम् ॥ १७ ॥

(அநுராதா.) மநு என்கிற மஹர்ஷியானவர் தரும ஸ்தாபநார்த்தமாகச் சொல்லியிருப்பதெல்லாம் மருந்து என்று *யத் வை கிஞ்ச மநுரவதத் தத் பேஷஜம்* என்கிற வாக்யத்தினால் வேதஞ் சொல்லிற்று; ஆனாலும் மணவாள மாமுனிகளின் திவ்ய ஸூக்திகளுக்கு மேற்பட்ட மருந்து ஒன்றிருப்பதாக மாஞானிகள் மதியார்.

रङ्गाधीश्वरगीतपद्यविशदख्यातेर्महायोगिनः
पादाब्जाश्रितशिष्यशिष्यपदयोस्सेवाऽप्यलं श्रेयसे ।
एवं सत्यपि हन्त येऽत्र विमुखा गुर्वन्तरान्वेषिणः
ते ज्येष्ठासन्निधात्सुसंपदमिह प्रेप्सोर्जनस्याग्रजाः ॥१८॥

(ஜ்யேஷ்டா.) ஸ்ரீரங்கநாதன் பணித்த தனியனால்

பரம்பின புகழுடையரான மணவாள மாமுனிகளை நேராக வணங்கப் பெருவிடினும் அவருடைய ஸம்பந்த ஸம்பந்த ஸம்பந்திகளை வணங்கப் பெற்றாலும் நன்மை பெறக் குறையில்லை; இங்ஙனே உண்மையிருந்தும் மாமுனிகள் பக்கலில் விமுகர்களாய் வேறு ஆசிரியரைத் தேடுமவர்கள் மூதேவியிடத்தில் செல்வம்பெற நினைப்பார்க்குத் துணைவரேயாவர். (கஅ)

जन्मशुद्धवैष्णवाग्र्यमानसोद्यदप्रमेयमोदमूलम्
अद्वितीयभक्तियुक्तदिव्यसूरिसूक्तितत्त्वबोधमूलम् ।
लक्ष्मणार्यदर्शनीयनिस्तुलार्थरत्नराशिजीवमूलम्
अत्र सुन्दरोपयन्तृयोगिवर्यनिस्तुलावतारमूलम् ॥ १९॥

(திருமூலம்.) மணவாள மாமுனிகளின் திருவவதார நன்னாளாகிய மூல நக்ஷத்ரமானது – இயற்கையில் பவித்திரர்களான ஸ்ரீவைஷ்ணவர்களின் நெஞ்சில் தோன்றும் பேரின்பத்திற்கு மூலம்; மிகச் சிறந்த பக்தர்களான ஆழ்வார்களின் அருளிச்செயல்களின் உண்மைப்பொருளை யுணர்வதற்கு மூலம்; எம்பெருமானார் தர்சனத்திலுள்ள ஆழ் பொருள்கள் உயிர் பெறுதற்கு மூலம். (கக)

मूर्तिरपूर्वाषाढगृहीतिस्फुटशोभा
वामनरूपा या बलिचित्तं हरतिस्म ।
सा तु मदग्रे तिष्ठतु कामं न हि सा मे
हर्तुमलं हृद्रम्यमुनीन्द्रप्रतिपन्नम् ॥ २० ॥

(பூர்வாஷாடம்.) பலாச தண்டத்தைக் கையிலேந்தி

அழகுபெற்ற அபூர்வமான வாமனமூர்த்தியானது மாவலியின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டதென்கிறார்கள்; அந்த மூர்த்தி என் கண்ணெதிரே வந்து நின்றாலும் மணவாள மாமுனிகளிடத்தில் ஈடுபட்ட எனது நெஞ்சைக் கவரமாட்டாததேயாம். (அபூர்வா, ஆஷாடக்ருஹீதி ஸ்புடசோபா என்று பதவிபாகம். பலாச தண்டுக்கு ஆஷாடமென்று பெயர். கீழ் ச்லோகத்தின் முடிவில் லகாரத்திற்கு அடுத்த மகாரம் இந்த ச்லோகத்தின் முதலெழுத்தாய் நின்றது; ஆகவே அந்தாதித் தொடைக்கு பங்கமில்லை.) (உ0)

नासहन्त यदहो तदषाढा इत्यदश्श्रुतिवचोनुगुणं ये ।
रम्ययोगिविभवान्न सहन्ते तानषाढपदतः कथयेयम् ॥

(உத்தராஷாடம்.) யஜுர்வேதத்தில் முதலஷ்டகத்தில் ஐந்தாவது ப்ரச்நத்தில் நக்ஷத்ரங்களின் நாமங்களுக்கு நிருக்தி காட்டுமிடத்து * யந் நாஸஹந்த, ததஷாடா: * என்று ஓதிற்று. ஸஹியாதவர்களுக்கு 'அஷாடா:' என்று பெயரானதாகச் சொல்லிற்று. ஸஹியாதவர்களென்றால் பொறுமைக்காரர்களென்றபடி. இந்த ச்ருதியின்படி, மணவாள மாமுனிகளின் வைபவங்களைப் பொறாத பாவிகளை நாம் அஷாடமென்போம். (இந்த ச்லோகத்தில் அஷாடபதம் இரட்டித்து வந்தது உத்தராஷாட கமகம்.) (உக)

यन्मन्त्रश्रवणकुतूहलं धरित्र्यामर्चामूर्तिषु निखिलासु नित्यमिन्धे ।
सोऽयं श्रीवरवरयोगिदिव्यमन्त्रस्सर्वेषामलमिह चित्तशोधनाय ॥२२

(ச்ரவணம்.) மணவாள மாமுனிகளின் தனியனையே ஸகல திவ்யதேசத்தெம்பெருமான்களும் திருச்செவி சாத்தக் குதூஹலம் கொண்டிருக்கின்றபடியை நன்கு உணரப்பெற்றால் உள்ளம் சுத்தமாகும். (௨௨)

यतिपतिपदपद्मसंबन्धनिष्ठागरिष्ठात्मनाम्
अपि वरवरयोगिपादारविन्दानुबन्धो न चेत् ।
न भवति गतिरुत्तमेति प्रतीत्या महान्तः पुरा
वरमुनिपदपद्ममाश्रित्य संप्रापुरुज्जीवनम् ॥ २३ ॥

(தநிஷ்டா.) உடையவருடைய திருவடி ஸம்பந்தம் பெற்றவர்களுக்கும் மணவாள மாமுனிகளின் திருவடி ஸம்பந்தம் இல்லையானால் உயர்கதியில்லை என்கிற அத்ய வஸாயம் கொண்ட முன்னோர்கள் மாமுனிகளின் திருவடிகளையே ஆச்ரயித்து உஜ்ஜீவிக்கப் பெற்றார்கள். (௨௩)

नरजनिमुपयाता नित्यरोगोपमर्दाः
दशशतभिषगंघ्रीन् संश्रयन्तो भ्रमन्ति ।
अहमिह वरयोगिश्रीपदाम्भोजरेणून्
हृदि कलयितुमिच्छन् सर्वरोगैर्विमुच्ये ॥ २४ ॥

(சதபிஷக்) மானிடராய்ப் பிறந்தவர்கள் நிச்சலும் நோயாளிகளாய் ஆயிரம் வைத்தியர்களை அடிபணிந்து உழல்கின்றனர்; அடியேனோ வென்னில், மணவாள மாமுனிகளின் ஸ்ரீபாத ரேணுக்களை நெஞ்சிற்கொள்ள நினைத்தவளவிலேயே நோய்களெல்லாம் தீரப்பெறு கின்றேன். (௨௪)

येऽपूर्वभद्रपदवीमिह लब्धुकामाः
ते रम्ययोगिपदभक्तसमीहितार्थान् ।
संसाधयेयुरिह चेदथ तैस्तु सद्यः
प्राप्येत सेति विशयोऽत्र न जातु लोके ॥ २५ ॥

(பூர்வபத்ரா) இவ்வுலகில் [அதிகாரஸ்தானங்களில்] உயர்ந்த பதவிகளைப்பெற விரும்புமவர்கள் மணவாள மாமுனிகளினடியார்க்கு நன்மை செய்வரேல் உடனே அவர்கள் உயர்ந்த பதவிகளில் ஏறப் பெறுவர்களென்பது திண்ணம். [இது ப்ரத்யக்ஷாநுபவஸித்தம்.] (உரு)

लोकोत्तरभद्रपदस्थितिमप्युत्सृज्य चिरं वरयोगिगुरोः ।
सद्भक्तगृहाङ्गणकिङ्करतां दासो मुहुरिच्छति लब्धुमसौ ॥ २६ ॥

(உத்தரபத்ரா) லோகோத்தரமாய் மங்களமான பதவி கிடைத்தாலும் அதிலிருப்பதை விட்டு மணவாள மாமுனிகளினடியார்களின் திருமாளிகைகளில் பணிவிடை செய்யவே அடியேன் காதலிப்பது. (உசா)

सौमित्रिरेवतीशौ श्रीरामानुजवरोपयन्तृमुनी ।
इत्यवतारांश्चतुरः चतुरः कृतवान् फणीन्द्र एव परम् ॥२७॥

(ரேவதீ) இளையபெருமாள், நம்பி மூத்தபிரான், எம்பெருமானார், மணவாள மாமுனிகள் என்கிற நான்கு அவதாரங்களைச் செய்த திருவனந்தாழ்வானே சதுரன்.

नक्षत्रमालां वरयोगिवर्यप्रभावसंकीर्तनसंप्रवीणाम् ।
नित्यं मुखे बिभ्रति ये महान्तः ते तारकाधीशवदुज्ज्वलेयुः ॥

ஸ்ரீமத் வரவரமுநி நக்ஷத்ரமாலை முற்றிற்று.

---

श्रीवैष्णवसौभाग्ये

# श्रीवरवरमुनि वारमाला

## ஸ்ரீவரவரமுநி வாரமாலா.

सौम्यजामातृयोगीन्द्रसद्गुणस्तोमभूषिताम् ।
वारमालामिमां वच्मि सारज्ञा हृदि बिभ्रतु ॥

---

आदित्योऽयं भुव्यवतीर्णः किमिहेति
प्राज्ञैस्सर्वैरुल्लिखितो यो विरराज ।
सोऽयं श्रीमत्सुन्दरयोगी गुरुवर्यः
तेजः किञ्चिद्दासजनेऽस्मिन्निदधातु ॥ १ ॥

सोमो भूमौ रम्यमुनीन्द्रः किमु जज्ञे ?
नैवैतस्मिन्नस्ति कलङ्कस्थितिवार्ता ।
नापि ह्रासो नैव च दोषाकरभावो
नो दुर्दैवाश्लेषकथा तत्कथमिन्दुः ॥ २ ॥

पूर्वे सर्वे देशिकवर्याः शुभचर्याः
यन्मूर्त्याऽत्र प्रादुरभूवन् समवेताः ।
तेनैतेन श्रीवरयोगिप्रवरेण
श्रीमान् रङ्गी मङ्गळवारान्निधिरासीत् ॥ ३ ॥

सर्वस्वामी सौम्यवराख्यो मुनिवर्यः
स्वीयश्रीपादाम्बुजतीर्थं सुपवित्रम् ।
अस्मत्पूर्वाचार्यवराय प्रदिशन् सन्
दिव्यज्ञानं तस्य समृद्धं तनुतेस्म ॥ ४ ॥

भूयांसोऽस्यां बिभ्रति भूमौ गुरुशब्दं
प्रायो रूढिस्तत्र भवेदित्यवधार्यम् ।
योगार्थस्य प्रेक्षणमस्मिन् सुशकं स्यात्
एकस्मिन् श्रीसुन्दरजामातृमुनीन्द्रे ॥ ५ ॥

काव्यालङ्कारादि पठित्वा कवितायां
वैचक्षण्यं ये दधुरेते निजवाणीम् ।
योगीन्द्रेऽस्मिन् रम्यवरे चेद्विनियुक्तां
कुर्युः श्रेयः प्राप्तुमनन्तं प्रभवेयुः ॥ ६ ॥

भूयिष्ठोक्त्या किन्नु फलं स्यात् शृणुतैतत्
जन्मन्यस्मिन् यस्तु सकृद्वा हृदयं स्वम् ।
सक्तं कुर्याद्रम्यमुनीन्द्रे गुणसिन्धौ
मन्दप्रज्ञोऽप्येष मनीषिप्रवरः स्यात् ॥ ७ ॥

वरयोगिमनोरम्यां वारमालामिमां पठन् ।
वारंवारमनर्थौघान् वारयेद्भववारिधौ ॥

---

# ॥ श्रीवरवरमुनितिथिमाला ॥

(अक्षरान्तादिः)

---

श्रीमति वरवरयोगिन्यद्भुतवैदुष्यशेवधौ भक्ताः ।
ये ते सात्त्विकगोष्ठ्यां प्रथमां गणनां भजन्ति नियमेन ॥१॥
नश्वरपुमर्थवांछां विसृज्य वरयोगिदिव्यसूक्तिषु ये ।
प्रेमप्रकर्षभरितास्तेषां शुभकीर्तिरद्वितीया स्यात् ॥ २ ॥
स्यादिह वरवरयोगी सततं मय्येव करुणया भरितः ।
यस्याः प्रभावभूम्ना सपदि ¶ तृतीया दृगन्तरुन्मिषति ॥ ३
तिमिरं निरसितुमवनौ तदातदा जन्म कुर्वतः फणिनः ।
यन्मूर्तिरिह $ चतुर्थी तं वरयोगीन्द्रमविरतं स्तुमहे ॥ ४ ॥
एतत्प्रपञ्चमीशो विष्णुः कृपयाऽभिरक्षतीति मृषा ।
सत्यं वरवरयोगी स्वकीयदिव्योक्तिततिभिरभिरक्षी ॥५॥
क्षित्यां वदन्ति भोग्यं पञ्चामृतनाम वस्तु तच्चास्तु ।
वरवरमुनीन्द्रसूक्तिषष्ठी धाराऽमृतस्य सत्यमिदम् ॥ ६ ॥
दमितेन्द्रियाः प्रसिद्धाः ऋषयोऽपि च सप्त मीनकेतुशरैः ।
बाध्यन्त एव नियतं वरवरयोगी परं विरक्ताग्र्यः ॥ ७ ॥
यस्याष्टमीन्दुसन्निभललाटलसदूर्ध्वपुण्ड्ररेखैव ।
सर्वेषु दिव्यदेशेषूल्लसति चिरात् स पातु वरयोगी ॥ ८ ॥

---

¶ तृतीया दृक् = ज्ञानचक्षुः ।

$ नक्षत्रमालाया अन्तिमश्लोकेन व्याख्येयमेतत् ॥

